வேர்க்குரு
தாக்கும்
போது...

**ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே
உடல் அரிப்பு மற்றும் எரிச்சலை நிறுத்து-
கிறது உடனடியாக.**

எப்போது வேர்க்குரு தாக்கினாலும்
அதை முறியடிக்க உபயோகியுங்கள்
ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்.
ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில்
மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக்
கலவை அடங்கியுள்ளது. அது
3 வழிகளில் தீவிரமாக செயல்
படுகிறது :

- ☐ பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- ☐ வியர்வையை உறிஞ்சுகிறது.
- ☐ உடல் அரிப்பு மற்றும் எரிச்சலுக்கு நிவாரணமளிக்கிறது உடனடியாக !






சந்தன
மணத்திலும்
கிடைக்கிறது

Johnson & Johnson




(பலத்த தூக்கத்திற்குப்பின் எழுந்த அனுபவங்களைக் கொண்டு எழுதப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரை)

## கனவுகள் எப்படி வருகின்றன?

கனவுகள் எப்பொழுதும் தூங்கும்போது மட்டுமே வருகின்றன. விழித்துக்கொண்டிருக்கும்போது கனவுகள் வருவது கிடையாது. ஆனால் பகல் கனவுகள், நம்மால் இயலாத, கைக்கு எட்டாத விஷயத்தைக் கற்பனை பண்ணும்போது வரும். கனவுகளின் சுபாவம், அது எப்போதுமே கண்ணுக்குள் மட்டும்தான் வரும்.

நாம் மனத்தில் எதை நினைத்துக்கொண்டு படுத்துக்கொள்கிறோமோ அதுவே கனவாக வருகிறது.

உதாரணமாக, கனவில் பேய் வருவது போல் தோன்றி சில சமயம் அலறிக்கொண்டு கட்டிலிலிருந்து கீழே விழுவீர்கள்.

அன்று பகல் முழுவதும் உங்கள் மனத்தில் மனைவியைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்திருப்பீர்கள்.

ஒரு முடிவில்லாத புள்ளியை நோக்கி மெதுவாக நீங்கள் நகர்ந்து போவது போல் சில சமயம் கனவு வரும். அன்று முழுக்க ரேஷன் கடை வரிசையிலேயோ, அல்லது தண்ணீருக்கான வரிசையிலேயோ நின்றிருந்திருப்பீர்கள்.

கனவில் எதையோ கண்டு அல்பத்தனமாக அசடு வழிந்தபடி சில இரவுகளில் நீங்கள் சிரித்தபடியே தூங்குகிறீர்கள் என்றால், அன்று யாரோ முன்பின் தெரியாத இளம் பெண், பஸ் ஸ்டாண்டில் உங்களிடம் 'டைம் ப்ளீஸ்' என்று கேட்டிருக்கலாம்.

கனவில் கறுப்பாக ஒரு உருவம் கையை நீட்டி ஏதோ கேட்கிற பாணியில் பயங்கரமான கனவுகள் வந்தால் சற்று உன்னிப்பாகக் கவனித்துப் பாருங்கள். வீட்டுக்காரன், பால்காரன், (கடன் கொடுத்த) பக்கத்து சீட் நண்பர் என்று யாராவது தெரியும்.

ஆக கனவுகள் எங்கிருந்தோ வருவது கிடையாது என்னும் பேருண்மையை உணர்ந்து இருப்பீர்கள் இப்போது.

## தவிர்ப்பது எப்படி?

இப்படி ஒரு நியாயமான கேள்வி எழுவது இயல்பே.

கனவுகளைத் தவிர்க்க ஒரே வழி— கண்களை மூடாமல் தூங்குவதுதான்.



○ டபுள் பங்சர் முறையில் ஆபரேஷன் நடக்கிறது

வயிறு போன்ற பகுதிகளில் இதனை ஊசி குத்தும் முறையில் நுழைத்து வயிற்றுக்குள் உள்ள சங்கதிகளைப் பார்க்கலாம். வயிற்றை அறுக்க வேண்டிய அவசியம் இல்லை. இந்த ஸ்கோப்பில் சில உபரிக்கருவிகளை இணைத்து இதனைக் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷனுக்குத் தற்போது பெரிதும் உபயோகிக்க ஆரம்பித்துள்ளனர். குறுகிய காலத்தில் ஆயிரக் கணக்கான ஆபரேஷன்கள் செய்யலாம். ஜெர்மனியில் பிறந்த லாப்ராஸ் கோப்பை அமெரிக்காவில் நவீனப்படுத்தியிருக்கிறார்கள்.

இந்தக் கருவி பெண்களுக்கு மட்டும்தான் ஆபரேஷன் செய்ய உதவும். முதலில் பேஷண்டைச் சுமார் 6 மணிநேரம் உணவு எதும் கொடுக்காமல் தயார்ப்படுத்துகின்றனர். கர்ப்பம் தரிக்காமல் இருக்கிறார்களா? மாதாந்திர விலக்குச் சரியாக உள்ளதா? சிறுநீர் பரிசோதனை, ஹீமோகுளோபின் பரிசோதனை எல்லாம் ஒ. கே. ஆன பின்தான் ஆபரேஷன்.

லேசான மயக்கமும், லோகல் அனஸ்தீஸியாவும் தருகிறார்கள். சில பேஷண்டுகள் ஆபரேஷன்போது பேசவும் செய்கிறார்கள். தொப்புளுக்குக் கீழே அடிவயிற்றில் ட்ரோக்கர் என்னும் குழாயுடன் கூடிய ஊசியால் துளை போடுகிறார்கள். பிறகு ஊசியை எடுத்துவிட்டு அந்தக் குழாய்க்குள் லாப்ராஸ் கோப்பை நுழைத்து வயிற்றுக்குள் குளோசப்பிலே பார்க்கிறார்கள். அப்படிப் பார்க்க

# 1½ நிமிட நேரத்தில் ஆப்பரேஷன்

நெய்வேலி பொது மருத்துவமனை ஏ.ஸி. ஆபரேஷன் தியேட்டரில் ஆங்காங்கே ஒழுங்கு செய்யப்பட்ட ஆறு ஆபரேஷன் டேபிள்கள். ஆறிலும் ஆறு பேஷண்ட்கள். ஆபரேஷன் செய்யும் டாக்டர் வந்து ஊசிபோல் கருவியைச் செருகி பம்ப் போல ஒன்றை அழுத்த ஆபரேஷன் முடிகிறது.

அடுத்த டேபிளுக்கு டாக்டர் நகர்கிறார்.

ஒன்றரை நிமிடம்.

பிறகு அடுத்த டேபிள்.

இப்படியே.....

டாக்டர் திரும்ப முதல் டேபிளுக்கு வருவதற்குள் நாஸ்கள் பேஷண்டை மாற்றி அடுத்தவரை ஆபரேஷனுக்குத் தயாராக்கி விடுகிறார்கள்.

பலசமயம் டாக்டரின் வேகத்துக்கு நர்ஸ்களால் ஈடு கொடுக்க முடியவில்லை. சரி, என்ன நடக்கிறது இங்கே?

லாப்ராஸ்கோப் என்பது சாதாரண இஞ்ஜக்ஷன் சிரஞ்சைப் போன்ற ஒரு மருத்துவக் கருவி. ஒன்றுக்குள் ஒன்றாய் பல இணைப்புகள் கொண்டது. விலை சுமார் ஒரு லட்சம்.

ஸ்கோப்பின் நுனியில் உள்ள கோல்ட் லைட் வயிற்றுக்குள் வெளிச்சம் காட்டுகிறது.

கர்ப்பப் பையுடன் இணைந்த இரு ஃபேலோபியன் குழாய்கள் வழியாக முட்டைக் கரு கர்ப்பப் பைக்கு வருகிறது. குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷனில்முன்பெல்லாம் வயிற்றைக் கிழித்து ஃபேலோபியன் குழாயை வெட்டி விடுவார்கள். நவீன லாப்ராஸ்கோப் முறையில் இந்தக் குழாயை இழுத்து ரப்பர் பேண்ட், ஒன்றைப் போட்டு வழியை அடைத்து விடுகிறார்கள். சிறுமிகள் தலைப் பின்னலுக்குப் போடும் ரப்பர் பேண்ட் போல.

ஆபரேஷனின் அடுத்த கட்டமாக நுனியில் கொக்கி போன்ற அமைப்புக் கொண்ட கருவி மேல் சிறிய விசேஷ சிலிகான் பேண்ட் ஒன்று பொருத்தி அதனை ஸ்கோப்பின் குழாய்க்குள் செருகுவார்கள். அது ஃபேலோபியன் குழாயின் மேல் நழுவி விட விசை தருவார்கள். (trigger) ஸ்கோப்பின் நுனியை உட்புறமாகத் திருப்பி இன்னொரு ஃபேலோபியன் குழாயிலும் சிலிகான் பேண்ட் போடப்படும்.



○ லாப்ராஸ்கோப் கருவியும் உபரி இணைப்புக் கருவிகளும்

இவை யாவும் சிங்கிள் பங்சர் முறை. டபிள் பங்சர் முறை இன்னும் வசதியுடன் விரைவாகச் செய்ய உதவும். ஃபெலோபியன் குழாயின் நுண்ணிய பாதை இறுகி இந்த பேண்டினால் மூடப்பட்டு விடும். லாப்ராஸ்கோப்பை வெளியே இழுத்தவுடன் பஞ்சில் நனைத்த டிஞ்சர் பென்ஜாயின் சீல் அல்லது ஒரு தையல் வைத்து பிளாஸ்டர் போட்டவுடன் ஆபரேஷன் முடிகிறது.

ஆபரேஷன் முடிந்த சில மணி நேரங்களில் பேஷண்ட் எழுந்து வீட்டுக்குப் போய்ச் சமையல் வேலைகளைக் கூடக் கவனிக்கலாம். நீண்ட கால ஓய்வு தேவையில்லை. சில சமயங்களில் மயக்க மருந்து அதிகம் கொடுத்து விட்டால் சிறிது ஓய்வு தேவை. உடல்நிலையில் எந்தப் பாதிப்பும் இருக்காது. எப்போதும் போலவே சாப்பிடலாம்.

இதற்கென்று தனியாகப் பயிற்சி பெற்ற டாக்டர்கள்தான் இந்த ஆபரேஷன் செய்ய அனுமதிக்கப்பட்டு வருகிறார்கள். தற்சமயம் எல்லா மாவட்டங்களிலும் இந்த லாப்ராஸ்கோப் முறையைப் பயன்படுத்தி முகாம் அமைத்து வெகு விரைவில் குறுகிய நேரத்தில் அதிக ஆபரேஷன் செய்து வருகிறார்கள்.

சமீபத்தில் நெய்வேலி பொது மருத்துவ பணியில் நடந்த தென்னார்க்காடு மாவட்ட குடும்ப நல கேம்பில் சுமார் 2500 ஆபரேஷன்களை 65 மணி நேரங்களில் செய்து முடித்து ஒரு சாதனையை நிகழ்த்தியிருக்கிறார்கள். குறுகிய சில நாட்களில் ஆயிரக் கணக்கான மக்களை மாவட்டத்தின் மூலை முடுக்கிலிருந்து தேடிப் பிடித்துக் கொண்டு வந்து சேர்ப்பது; அவர்களுக்குத் தங்க வசதி செய்வது; ஆபரேஷனுக்கு முந்தைய ஆயத்தங்களைச் செய்வது; ஆபரேஷன் முடிந்து ஊக்குவிப்புத் தொகை தருவது போன்றவற்றைத் திட்டமிட்டுச் செய்வதில் தான் இது போன்ற மாபெரும் கேம்ப்களின் வெற்றி அடங்கியுள்ளது.

தென்னார்க்காடு அரசாங்க மருத்துவ பணிகளில் லாப்ராஸ்கோப் ஆபரேஷன் செய்ய இது போன்ற வசதி இன்மையால் நெய்வேலி நிறுவனம் பெரிய மனத்துடன் மருத்துவமனையையும் ஏ. ஸி. ஆபரேஷன் தியேட்டரையும் இலவசமாக பால், ரொட்டி, பழம் போன்ற உணவு வகைகளையும், அளித்து இந்தத் தேசிய இயக்கத்தை வெற்றிபெறச்

○ ஆபரேஷனுக்குக் காத்திருப்பவர்கள்



பெண்ணின் அப்பா: ''சம்பந்தி எனக்குக் கொஞ்சம் பண நெருக்கடி. அதனால், ஒட்டியாணத்தைக் கல்யாணத்தின்போது போட முடியாது.''
பையனின் அப்பா: ''அதனால் என்ன. சீமந்தத்தின்போது போடுங்களேன்''
—ஆர்.சி.எஸ். கர்

செய்தது. தென்னார்க்காடு 1982—83 குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் குறியீட்டைப் பூர்த்தி செய்து விட்டது பாராட்டுக்குரியது.

ஆபரேஷன் செய்யப்பட்ட பிறகு இருநூறு ரூபாய் ஊக்க அன்பளிப்பாக ஒவ்வொருவருக்கும் அளிக்கப்படுகிறது. இது ஏழை மக்களை ஈர்க்கப் பெரிதும் உதவுகிறது.

லாப்ராஸ்கோப் ஆபரேஷனுக்கென்று பயிற்சி பெற்ற அரசு மருத்துவர்களும், தனியார் துறை மருத்துவர்களும் விசேஷமாக நியமிக்கப்படுகின்றனர். தனியார் டாக்டருக்கு சுமார் 10 மடங்கு அதிக அளவு அரசினர் மருத்துவரை விட ஊக்கத் தொகை அளிக்கப்படுகிறது. இந்த வித்தியாசத்தால் திறமை மிக்க அரசாங்க மருத்துவர்கள் தங்கள் திறமையைக் காட்ட மனமின்றிச் சோர்ந்து விடுகிறார்கள்.

லாப்ராஸ்கோப்பை இயக்கும் மருத்துவர்களால் மட்டும் இத்தகைய முகாம்கள் வெற்றியடைய முடியாது. மருத்துவமனை வசதிகள், ஏ. ஸி. ஆபரேஷன் தியேட்டர், ஆபரேஷன் வேகத்துக்கு ஈடு கொடுக்கும் நர்ஸ்கள், உதவியாளர்கள், வேகமாகக் கவுன்கள், கையுறைகளைக் கிருமிகளற்றதாக ஸ்டெரயில் செய்யும் ஆடோகிளோவ் உபகாரணம் போன்ற எல்லாம் தேவை. எல்லாவற்றுக்கும் மேலாக, மாவட்டத்தின் பல பாகங்களிலிருந்து பஸ், மாட்டு வண்டி, வேன், லாரி ஆகிய வாகனங்களில் பேஷண்ட்களைக் கொண்டு வந்து, ஆப்ரேஷன் முடியும் வரை காத்திருந்து, மீண்டும் அவர்களைக் கிராமத்திற்குக் கொண்டு சேர்க்கும் மாவட்ட அபிவிருத்தி பஞ்சாயத்து அபிவிருத்தி அதிகாரியின் பொறுப்பு மிகுதி.

லாப்ராஸ்கோப் இவ்வளவு எளிமையாகவும், திறமையாகவும் இயங்குவதாலேயே ஒரு ஆபத்தும் உண்டு. அது சிலரிடம் அலட்சிய மனோபாவத்தை உருவாக்கி விடும். இதற்குச் சம்பந்தப்பட்ட யாருமே இடம் தராமல் கருத்தடைச் சிகிச்சைக்கு வருகிறவர்களைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டு எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

**—டாக்டர் ஜீ. ஜெயராஜ்**

# தெலுங்கு கங்கை விரைவில் வருமா?

○ வானதி, நெய்வேலி

? இந்திய உணவுக் கழகத்தின் சரியான பராமரிப்பு இன்மையால் ரூ. 120 கோடி பெறுமானமுள்ள உணவுத் தானியங்கள் பாழாகி விட்டனவாமே?

! ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் பாழ் என்பது போல்தான் அரசு புகுந்த தொழில் வர்த்தகம். தமிழக அரசின் கோழிப் பண்ணையில் ஒரு முட்டை தயாரிக்க ஆன செலவு 1977ல் ரூ. 4 என்று பொதுக் கணக்குக் கமிட்டி சுட்டிக் காட்டுகிறது. இன்னும் தமிழக அரசின் மொபெட் தொழிலகத்தில் பல லட்சக் கணக்கில் நஷ்டம் வரவும் தொடர்ந்து நடத்தவும் முடியாமல் இழுத்து மூடவும் மனமில்லாமல் தவிக்கிறது. மத்திய அரசின் மேற்பார்வையில் ராணுவம் டாங்கி அழிக்கும் ஏவுகணை தயாரிக்க ரூ. 6 லட்சம் செலவிடுவதாகத் திட்டமிட்டுப் பத்து ஆண்டுகளில் ரூ. 29 லட்சம் செலவழித்துக் கண்ட பலன் பூஜ்யமே.

○ ஆசைத்தம்பி, தாரமங்கலம்

? தெலுங்கு கங்கை அடிக்கல் நாட்டு விழா இனிது முடிந்து விட்டது. தண்ணீரும் விரைவில் வருமா?

! ஒப்பந்தம் கையெழுத்தானபோது எடுத்த புகைப்படத்தைப் பிரசுரித்த ஹிந்து, 'எம். ஜி. ஆருக்கு ஓர் அம்சம் பற்றி விளக்கம் தருகிறார் என். டி. ஆர்' என்று எழுதியிருந்தது. நமக்கும்தான் விளக்கம் தேவை. முதலில் செலவில் தமிழகத்தின் பங்கு ரூ. 220 கோடி என்று கூறப்பட்டது. ஆந்திர எல்லையிலிருந்து சென்னை வரை நீர் கொண்டுவர இச்செலவு என எண்ணினோம். இப்பொழுதோ ஆந்திர மாநிலத்திலேயே தமிழகத்தின் செலவு ரூ. 220 கோடி என்றும் தமிழக எல்லைக்குள் ரூ. 500 கோடி என்றும் பேசப்படுகிறது. திட்டம் முடிவதற்குள் மொத்தச் செலவு ஆயிரம் கோடிக்கு மேல் போகலாம். முதலில் வந்த தவறான செய்திகளுக்கு யார் பொறுப்பு? தமிழக முதல்வரும் அதிகாரிகளும் ஒப்பந்தத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையா? அல்லது அவர்கள் ஏமாந்து போனார்களா? முதலில் கிடைத்த செய்தி செந்தேன். பிறகு வந்த தகவல்கள் பேரிடி. மழை வரும் வரை ரயிலில் வரும் கிருஷ்ணா நதி நீர். அப்புறம்...கிருஷ்ணா கிருஷ்ணாதான்.

○ தேனி தெய்வநாயகம், கல்லிடைக்குறிச்சி

? தண்ணீர்ப் பிரச்னையே இல்லாத நெய்வேலிக்குத் தலைநகரை மாற்றினால் என்ன?

! இப்போதேதான் வேண்ட அளவு கரியைப் பூசிக் கொண்டிருக்கிறார்களே!

○ வானொலி தாசன், மதுக்கூர்

? தர்மத்தை எப்போது சூது கவ்வுகிறது?

! மாருதி காருக்காக அயல் நாட்டிலிருந்து பாகங்கள் தருவித்தால் அதற்கு இறக்குமதி வரி 40 சதம். ஆனால் அம்பாஸிடர், பியட் கார்களுக்கு அயல் நாட்டுப் பாகங்கள் தருவித்தால் 160 சதம் இறக்குமதி வரி. இது என்ன அநியாயம் என்று கேட்டால் மாருதி 1000 சக்தி உடையது. மற்றவை 1400 சக்தி உள்ளவை என்று சால்ஜாப்பு. மற்றவை ஏற்கனவே இங்கு தயாராகிக் கொண்டிருந்ததால் மாருதி சக்தியைக் குறைவாக நிர்ணயிப்பதில் சங்கடமேதும் இல்லையல்லவா? சூது கவ்வுவது இப்படித்தான்!

○ க. அரபியா பேகம், சிதம்பரம் ★

? பஞ்சாபில் போலீஸ் அதிகாரி ஒருவர் சுட்டுக் கொல்லப்பட்டாரே!

! அந்தப் படுபாதகத்தைச் செய்தவர்கள் தங்களைச் சீக்கியர்கள் என்று கூறிக்கொள்ளவே தகுதியற்றவர்கள். அந்த அதிகாரி கோயில் பிரசாதத்தைக் கையில் வைத்துக்கொண்டு விழுந்து மடிந்திருக்கிறார். ஒரு பாவமும் அறியாத 11 வயது பையன் ஒருவனும் இப்படுகொலையில் பலிவாங்கப் பட்டிருக்கிறான். அன்பு மார்க்கமான சீக்கிய மதத்தின் பெயரால் இப்படியெல்லாம் நடந்து கொள்வோரின் கொட்டம் அடங்க வேண்டுமானால் பஞ்சாபின் மிதவாதிகளும் மத்திய மாநில அரசுகளும் அரசியல் மாச்சரியங்களை மறந்து ஒன்றுபட வேண்டும். ஆனால் அது நடக்கவா போகிறது?

○ மு. செல்வகுமார், சென்னை-4

? கவிஞர் வைரமுத்துவைத் தாய் பத்திரிகை கடுமையாகத் தாக்கியுள்ளதே கவனித்தீரா?

! கவனித்தேன்! கவனித்தேன்! வைரமுத்துவின் கல்கி கட்டுரையில் மரபுக் கவிதை







யின் மவுசு குறைகிறதே என்ற கவலை தெரிந்தது. தாய் கட்டுரையில் அதை எழுதியவருக்கு வைரமுத்து மீது உள்ள காழ்ப்புணர்ச்சி புரிகிறது.

○ எஸ். அன்புமணி, ஈரோடு

? துக்ளக்கில் வெளிவரும் துருவாசர் தொடர் கட்டுரை பற்றி.....?

! அட ஆண்டவனே! இன்னும் எத்தனை வாரம் தான் இந்தக் கேள்வியையே கேட்டுக் கொண்டிருப்பது? முதல் கட்டுரை பற்றிய குழுத்தில விமர்சனத்தை நான் ஏற்கவில்லை. இரண்டாவது கட்டுரையில் ஹேமா ஆனந்த தீர்த்தனை துருவாசர் தாக்கி எழுதிய விதம் எனக்குப் பிடிக்கவில்லை. மூன்றாவது கட்டுரையைப் படிப்பதாக இல்லை. ஆளை விடுங்கள்.

○ கலோசன், காட்பாடி

? கூட்டுச் சேரா மாநாடு நடந்து முடிந்து இத்தனை காலம் ஆகிவிட்டதே. அதனால் என்ன லாபம்? ஆர அமர யோசித்தீர்களா?

! ரூ. 2½ கோடி செலவில் இந்த மாநாட்டுக்கென்றே தருவிக்கப்பட்ட 45 மெர்ஸிடஸ் பென்ஸ் கார்கள் புதுதில்லியில் வரிசையாக நிற்கின்றனவே. அவற்றை இனி பயன்படுத்தப்போகும் பெருந் தலைகளுக்கு நிச்சயமாக இந்த மகாநாட்டினால் லாபம் தானே?

○ ஜி. சித்ரா, ஸ்ரீரங்கம்

? எஸ். ஜானகி பாராட்டு விழாவில் ஜமுனாராணி பாடிய 'மாமா மாமா' பாடலை திருஷ்டி பரிகாரம் என்று உமது நிருபர் குறிப்பிடுகிறார் எனில் எஸ். ஜானகி பாடிய 'பொன் மேனி உருகுதே' எதில் சேர்த்தி?

! வெள்ளி விழா போன்ற மங்களமான நிகழ்ச்சிகளில் பாடப்பட வேண்டாத பாடல்களுடன் சேர்த்தி.

⌘ மு. மைனுதீன், மதுரை.

? 1967-லிருந்து 73-க்குள் கிட்டத்தட்ட 2700 எம்.எல்.ஏ., எம். பிக்கள் கட்சி தாவல் செய்திருக்கிறார்கள் என்று தேர்தல் கமிஷனர் கூறியுள்ளது குறித்து...?

! வஞ்சக இந்தியாவுக்கென்றே கின்னஸ் புக் ஆஃப் ரிகார்ட்ஸ் ஒன்று பிரத்தியேகமாகத் தயாரிக்கலாம். அத்தனை உலகச் சாதனைகள் நிகழ்ந்துள்ளன இங்கு.

⌘ ஏ. ஹரிதாஸ், அக்கம்பாளையம்.

? சில எழுத்தாளர்கள் ஆத்ம திருப்திக்குத் தான் தாங்கள் எழுதுவதாகக் கூறுகிறார்களே?

! அதில் தவறேதுமில்லை. ஆனால் ஆத்ம திருப்திக்காக அன்றி வாசகர்களுக்காகவே எழுதிப்பிரபலமடைகிறவர்கள் மீது இவர்களில் சிலர் பாயும் போது ஆத்மாவின் திருப்தியை அல்ல, ஏக்கத்தைத் தான் காண்கிறோம்.

○ எஸ். கணேசன், திருநெல்வேலி

? ஒரு பக்கம் பிராணிகள் வதைத் தடுப்புச் சங்கம்; மறு பக்கம் கசாப்புக் கடைக்குச்செல்லத் தகுதியான ஆரோக்கியமுடையவை என்று முத்திரை வழங்கும் நிலையம் - ஒன்றும் புரியவில்லையே?

! அசைவ உணவுப் பழக்கத்தைச் சட்டம் போட்டுத் தடுக்க முடியாது. மன மாற்றத்தை உண்டாக்க முயலலாம். அசைவ உணவுப் பழக்கம் இருக்கும்வரை அந்த உணவால்மனிதனின் உடல் ஆரோக்கியம் கெடாமல் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு அரசுக்கு உண்டு. அதனால்தான் கசாப்புக் கடைக்குச் செல்லத் தகுதியுடைய ஆரோக்கியமானவை என்று முத்திரை குத்துவது. பிராணிகள் வதை தடுப்புச் சங்கம் அசைவ உணவை எதிர்த்துப் பிரசாரம் செய்வது அல்ல. அதற்கு வேறு ஒரு நிறுவனம் உள்ளது. உணவுக்காக மிருகத்தை வெட்டினாலும் அதைக் கணப் பொழுதில் அப்பிராணி வலி உணராதபடிக்குச் செய்ய முடியும். இதற்காக மிக நவீனக் கருவிகள் உள்ளன. ஆனால் நம் நாட்டில் இன்னமும் உணவுக்காக வெட்டப்படும் மிருகங்கள் சொல்லொணாச் சித்ரவதைக்கு உள்ளாகின்றன. இதை யெல்லாம் திருத்துவதுதான் பிராணி வதைத் தடுப்புச் சங்கத்தின் நோக்கம்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

க. அரபியா பேகம்

5, லெப்பைத் தெரு,

சிதம்பரம்.




இந்த உலகில் உள்ள அனைத்துப் பொருள்களையும் படைத்து, காத்து, அழிக்கும் ஆற்றல் உடையவன் ஈசுவரன். ''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்பது பழமொழி. இறைவனை ஜோதி வடிவமாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. அருவ வடிவாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. அதே இறைவன் அருவத்தில் இருந்துஉருவமாகி அந்த உருவமும் ஒவ்வொரு வடிவத்திலிருந்து பல வடிவங்களாக வந்து அருள் பாலிக்கின்றது. உருவம் இல்லாத தண்ணீர் ஓர் உருவமாக ஐஸ் கட்டியாகி, அந்த ஐஸ் கட்டியே பல வடிவங்களாக ஐஸ் க்ரீம்களாக ஆகின்றன. இப்படி ஆவது அதிகமாக மக்கள் உபயோகப்படுத்துவதற்காகத்தான். இது போலத்தான் அதிக மக்களுக்கு இறைவன் மீது பக்தி வளர்வதற்காகத்தான் ''அருவமும் உருவமாகி அநாதியாய் பலவாய்'' இறைவன் இருந்து அருள் பாலிக்கிறான். உருவமில்லாத இறைவன் ஆயிரக் கணக்கான உருவத்தில் தோன்றுகிறான். ஒரு பெயரால் குறிப்பிட்டு அழைக்க முடியாத இறைவன் ஆயிரக் கணக்கான பெயரால் அழைக்கப்படுகிறான். ஒரு குறிப்பிட்ட உருப்பால்தான் அற்புதத்தைக் காண்பிக்க முடியும் என்றில்லாமல் இறைவன் ஆயிரக் கணக்கான அற்புதங்களையெல்லாம் உருவமெடுத்துக் காண்பிக்கிறான். ஸ்படிகக் கல் போன்றவன் இறைவன். ஸ்படிகம் சுத்தமானது அதற்கெனத் தனி உருவமோ, நிறமோ கிடையாது. ஸ்படிகக் கல்லை எப்படிச் செதுக்கினாலும் அந்த வடிவத்திலே ஓர் உருவம் தென்படும். அந்த ஸ்படிகக் கல் முன்பு எந்த ஒரு நிறப் பொருளை வைத்தாலும் அந்த நிறமெல்லாம் ஸ்படிகத்தில் தெரியும். பொருளை எடுத்து விட்டால் நிறம் ஒன்றும் தெரியாது. இது போலத்தான் இறைவன் எந்தெந்த மாதிரி பக்தர்களுக்கு அருள் பாலிக்க வேண்டுமோ அந்தந்த வடிவத்திலே வந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறான். இறைவனுடைய புகழை வாயாரப் பாடுவதற்கும் அவனுடைய கருணையின் லீலைகளை உணர்வதற்கும் இறைவனை மனத்திலே நினைத்துத் தியானிப்பதற்கும் இறைவனுக்கு எல்லாப் பொருளையும் அர்ப்பணித்து அதைப் பிரசாதமாக நாம் எடுத்து அனுபவிப்பதற்கும் இறைவனுடைய கருணை நம்மீது ஏற்பட்டு அதை நாம் உணர்வதற்காக 'ரிஷபாரூடராக'வும் 'பார்வதி பரமேச்வரனாக'வும் 'கருடா ரூடராக 'லக்ஷ்மி நாராயணராகவும்' உருவ வடிவத்திலே அருள் பாலிக்கிறார்.



கல்கண்டும் அதில் உள்ள இனிப்பும் போல அருவமும் உருவமும். கல்கண்டு உருவ வடிவத்தில் காணப்படுகின்றது. அதிலுள்ள இனிப்பானது கண்ணுக்குத் தெரிவதில்லை. அனுபவத்தில் தெரிகிறது. இனிப்பையும் கல்கண்டையும் தனித்துப் பிரித்துப் பார்க்க முடியாது. கல்கண்டைக் கண்ணால் கண்டு அதிலுள்ள இனிப்பைநாம் அனுபவித்து உணரலாம். அதுபோல் உருவ இறைவனின் மூலமாக அருவ இறைவனை அனுபவித்துஅறிய முடியும். இனிப்பை அனுபவித்த பிறகு கல்கண்டு கண்ணுக்குத் தெரியாது. அது போல் சாதனையின்போது இறைவனது உருவம் அவசியம். சாதனையின் பயனை அடைந்த போது கல்கண்டு மறைவது போல உருவம் மறைந்து இனிப்பு மாத்திரம் மிஞ்சுவது போல ஆனந்தம் மட்டும் மிஞ்சுகிறது. ஆகவே இறைவன் ஆனந்த வடிவமானவன், ஜோதி வடிவமானவன், பெயர் உருவமற்றவன், மக்களை உய்விப்பதற்காக ஆயிரக் கணக்கான பெயரும், உருவமும் எடுத்துக் கொண்டு கருணையோடு அருள்பாலிக்கிறவன் ஈஸ்வரன்.





**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**
**ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சாரிய சுவாமிகள்**



தெலுங்கு கங்கா இந்திரா கங்காவாகவே விளங்க வேண்டும், தாயே!
பணம் கிடைக்க அருள்புரிய வேண்டும், தாயே!




சோவியத் உதவிப் பிரதமர் இந்தியாவுக்கு வந்து பல்வேறு பிரச்னைகளை விவாதிக்கப் போகிறார்! - செய்தி
ஒண்ணும் கவலைப் படாதீங்க!.. 'இன்டீரியர் டெகோரேஷன்லே' நான் எக்ஸ்பர்ட்! அங்கங்கே சிகப்பு வர்ணம் பூசி இந்த வால் பேப்பரையும் ஒட்டிட்டா ஜோரா இருக்கும்! உங்க வீடு அடையாளமே தெரியாது!
ரஷ்ய உதவிப் பிரதமர்






உள்ளே செல்ல விரும்புபவர்கள் வாசலில் இருக்கும் பணியாளருக்குப் படியளந்து விட்டுச் செல்லவும்
நுழைவு வரி




கல்கி



1983 மே 15
ருத்ரோத்காரி வைகாசி 1
மலர் : 41 இதழ் : 42



# அடக்குமுறை

தமிழ் நாட்டில் அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப்பட்டுள்ளது. மக்களுடைய நியாயமான எதிர்ப்புணர்ச்சி ஜனநாயக ரீதியாக அமைதியான முறையில் வெளிப்படுவதைக் கூடத் தமிழக அரசினால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. முன்னெச்சரிக்கை ஏதும் இன்றி மதுரை நெடுமாறன், நல்லசிவன் உள்பட ஓராயிரம் பேருக்கு மேல் உள்ளே தள்ள ஏற்பாடு செய்துவிட்டு மூகாம்பிகையைத் தரிசிக்கச் சென்றுவிட்டார் முதல்வர்.

'ஆட்சியில் இருப்பவரே ஹர்த்தாலை நடத்துவதா?' என்ற கேள்வியை ஒதுக்கிவிட்டு முதல்வரே ஹர்த்தால்களை முன்னின்று நடத்திய தருணங்கள் உண்டு. ஆனால் இப்போது மக்கள் ஒத்துழைப்புடன் வர்த்தகர்கள் சங்கம் அரசுக்கு எதிரான ஓர் அதிருப்தியை உணர்த்த ஹர்த்தால் நடத்துகையில் அதனை அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அரசின் இந்த அநீதியான போக்கைக் கண்டு கோபம் கொண்ட மக்களில் சிலர் வன்முறைகளில் இறங்க, அதைச் சாக்கிட்டுக்கொண்டு அடக்குமுறை மேலும் கடுமையாக்கப்படும் என நம்பலாம்.

முக்கிய பத்திரிகைகள் எல்லாமே நுழைவு வரியை ஆட்சேபித்துத் தலையங்கங்கள் எழுதியுள்ளன. இந்த வரியினால் ஏற்படக்கூடிய பாதகங்களை வர்த்தகர்கள் சங்கம் பல வாரங்களாகவே விளம்பரங்கள் மூலம் மக்களுக்குத் தெரிவித்து வந்திருக்கிறது. சட்டசபையில் பலத்த எதிர்ப்புக் குரல் எழுந்திருக்கிறது. ஆய்வுகள் கமிட்டி பரிசீலனைக்கு விடப்படும் என்ற எதிர்பார்ப்பும் ஏமாற்றமாகவே முடிந்தது.

நுழைவு வரி நிச்சயமாகப் பிற்போக்கானது; விலைவாசிகளை உயர்த்துவது; ஒருமைப்பாட்டிற்கு முரணானது; லஞ்ச லாவண்யங்களை வளர்ப்பது; தொழில் வர்த்தக வளர்ச்சிக்குக் குந்தகமானது. இதை நியாயப்படுத்த ஒரு வாதத்தைத்தான் அமைச்சரால் கூற முடிந்தது. அது, இந்த வரி வேறு சில மாநிலங்களிலும் உள்ளது என்பதுதான். இந்த வாதத்தில் நியாயமே இல்லை என்பதோடு இது ஒரு வாதமே அல்ல. அண்டை மாநிலங்களான ஆந்திரப் பிரதேசத்திலும், கேரளத்திலும் இது கிடையாது. கர்நாடகத்தில் உயர்நீதி மன்றம் இதற்குத் தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறது. ஜா கமிட்டி நுழைவு வரி கூடாது என்று சிபாரிசு செய்துள்ளது. தமிழகத்தில் நுழைவு வரி இன்னும் அமுலாக்கம் பெறவில்லை என்பதும் இதனை அமுலாக்கம் செய்யக் காலதாமதமாகிறது என்பதுமே இந்த வரி விதிப்பில் உள்ள ஆயிரம் சிக்கல்களைப் புலப்படுத்தும்.

இப்போதெல்லாம் அரசு எதைச் செய்தாலும் அதைச் சத்துணவுத் திட்டத்துடன் சம்பந்தப்படுத்தி நியாயப்படுத்திவிட முயல்வது சகஜமாயிருக்கிறது. அதன்படியே இந்த நுழைவு வரிக்கும் ஆதரவு போஸ்டர்கள் ஒட்டப்பட்டுள்ளன. இவை வெறும் கண் துடைப்பே. சத்துணவை எம். ஜீ. ஆர். போடவில்லை. வரி செலுத்தும் மக்கள்தான் தங்களுக்குத் தாங்களே கொடுத்துக் கொள்கிறார்கள். அரசு இயந்திரம் ஒத்துழைக்கிறது, அவ்வளவுதான். நுழைவு வரியால் பாதிக்கப்படப் போவதும் தமிழக மக்கள்தான்; தமிழகத்தின் வளர்ச்சிதான்.

நுழைவு வரியை இந்த மாநிலத்தில் நுழைய விடுவது திருமகளை... லக்ஷ்மியை அடித்து விரட்டிவிட்டு வழியோடு போகிற மூதேவியை அழைத்து வைத்துக் கொள்வதற்கு ஒப்பாகும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# சுகேசன் வழி—முதலீட்டில் ஒரு லாபகரமான வழி

சுகேசனில் முதலீடு செய்வோர் மூன்று வழிகளில் லாபமடைகிறார்கள்.
உங்கள் தேவைக்கேற்ற வழியை இன்றே தேர்ந்தெடுங்கள்.

நாங்கள் டிபாசிட்டுகளை ஏற்றுக்கொண்டு பின்கண்ட விகிதத்தில் வட்டி அளிக்கிறோம்.

**15%-18%** மாதந்தோறும், காலாண்டு தோறும், அரையாண்டு தோறும் மற்றும் ஆண்டுதோறும் வட்டி தரப்படும்

**23.19%** (ஏறத்தாழ) வட்டியும் டிபாசிட்டும் 3 ஆண்டு காலத்திற்கு பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

**66.67%** (ஏறத்தாழ) வட்டி, 3 வருட ரொக்க சர்ட்டிபிகேட்டுகளுக்கு வழங்கப்படும்

குறைந்த பட்ச டிபாசிட்டாக ரூ 1000/-ம் மற்றும்
500/ன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்



SUGESAN FINANCE INVESTMENT
(COPYRIGHT REGISTERED)



38, Rajaji Road, Madras-600 001.
Phones: 36870, 26690
Telex: 041/480, Grams: SUGESANS

BRANCHES: AHMEDABAD, BANGALORE, BOMBAY, CALCUTTA,
COCHIN, COIMBATORE, HYDERABAD & RAJKOT.

ADSERVICE-S-1417

# பழனியில் சிகிச்சை

பெறுங்கள் இதுவரை நீங்கள் கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுக வாழ்வு பெறலாம், வருக!

பிரபல உலகப் புகழ் வைத்திய மன்னன்

**Dr. S. காளிமுத்து,**

R.M.P., (IND), V.V.C., A.M.I.H., R.A.M., P.R.H.M.P.,

அவர்கள் பழனியில் 23-ந் தேதி முதல் 31ந்தேதி வரை அவர் தம்மை அலுவலகமான பழனி டவுன் பழைய தாராபுரம் ரோட்டில் உள்ள பழனி சித்தர் வைத்தியசாலை (Regd)யில் காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை, மாலை 4 மணி முதல் 6 மணி வரையிலும் நேரில் வந்திருந்து ஆலோசனையுடன் எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சையும் மருந்துகளும் பெறலாம்.

நீங்கள் கவலைப்படும் பிரச்சினையான தாம்பத்திய வாழ்வில் குறைபாடு, சோர்வு, வீரிய குறைவு, குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை, நரம்பு துவளல், தேக உறுப்புக்கள் மெலிவு, குழந்தை செல்வம் இல்லாமை, அணுக்கள் குறைவு, வெட்கம், நடுக்கம், இருமல், கபம், தும்மல், வாதநோய், வாய்வு, வயிற்றுவலி, உள்-வெளி ரத்த நவமூல வியாதிகள், குடல் புண், வாந்தி மற்றும் இதில் கூறப்படா நோய்களுக்கும் 86 வருட அனுபவ மருந்துகளும் ஆலோசனையும் நேரில் டாக்டரிடம் பெற்று சுகமடைய அழைக்கிறோம். வணக்கம்.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி–624 601**

போன்: 316, 316ஏ. ★ வீடு: 420 ★ தந்தி: சித்தர்

6

# நேசமுள்ள வான்சுடரே

சவீதா

ராம்குமார் தூரத்தில் மரத்தடியில் நின்றதைப் பத்மா பார்த்துவிட்டு பரபரப்படைந்து அறைக்குள் ஓடினாள். இதயப் படபடப்பால் சுவாசத் திணறல். கண்ணாடிக்குள் அவசரமாகப் பார்த்தாள். காதோரங்களில் எஞ்சியிருந்த சோப் நுரையை டவலால் துடைத்தெடுத்தாள். புடவை, ஜாக்கெட்டை மாற்



றிக்கொண்டிருக்க அது நேரமில்லை. அவனைக் காக்க வைக்கக் கூடாது. பவுடரை உள்ளங்கையில் கவிழ்த்தாள்.

எதற்காக என்னைத் தேடி வந்திருக்கிறான்? இந்த மகளிர் விடுதிப் பக்கம் கடந்த ஆண்டில் ஒரு முறைகூட அவன் வந்ததில்லையே. விடுதி நாள் கொண்டாட்டத்தின் போது, இதுதான் சமயமென்று ஆண்கள் விடுதி மாணவரெல்லாம் திமுதிமுவென்று இந்த விடுதிக்குள்ளே நுழைந்தனர். சொந்த வீட்டுக்குள் மனைவியைத் தேடும் கணவனைப் போல் சுதந்திரமாகப் புழங்கினர். அன்று கூட ராம்குமார் வந்த மாதிரித் தெரியவில்லை....

முகத்துக்கும் கழுத்துக்கும் லேசாகப் பவுடர் ஒத்திக் கொண்டு கைக்குட்டையால் அதைத் துடைத்துச் சமப்படுத்தினாள். புடவைத் தலைப்பால் தோள்களைப் போர்த்திக்கொண்டு அறையை விட்டு வெளியேறினாள்.

ஒரு மாத இடைவெளி ராம்குமாரின் தோற்றத்தில் எந்த மாறுதலையும் ஏற்படுத்திவிடவில்லை.

பெல்பாட்டம் அணிந்த உயரமான கால்களால் ஆறடி ஒரு அங்குலத்துக்குக் கம்பீரமாக நின்றான். ராஜகளை பொருந்திய பட்டோடி நவாபின் நீண்ட முகம். விசால நெற்றிக்குக் கீழே, சுடர் தெறிக்கும் கருநீலக் கண்களின் மேல் இமைகள் சற்றே கவிழ்ந்திருந்தன. மிகவும் நேரான எடுப்பான மூக்கு. மீசை அடர்த்தியாக, ரோஜா நிறத்தில் வார்க்கப்பட்டிருந்த வாயைச் சுற்றிலும் கண்ணியமான இனிய புன்னகைகளின் மெல்லிய சுவடுகள்...

"குட் ஈவினிங் மிஸ் மெடிகல் ஸ்டூடண்ட்!" என்றான். குரல் மேலும் முரடாகியிருந்தது.

"குட் ஈவ்னிங்."

"ஸாரி, உங்களை டிஸ்டர்ப் பண்ணிட்டேனா?"

"நோ நோ" என்றான். "எப்போ வந்தீங்க?"

"ரெண்டு நிமிஷத்துக்கு முன்னால."

"கொடைக்கானல்லேர்ந்து எப்போ வந்தீங்க?"



பாகவதர்வாள்! நீங்க சபாவிலே பாடின 'வர்ணத்தை' விட டி.வியிலே பாடின வர்ணம் 'பளிச்'னு இருந்தது! கலர் டி.வி.யிலே பார்த்தேன்!

"காலைலதான்."

"அதான் ரெஸ்ட் எடுத்துக்கிட்டீங்களா?"

"யார் ரெஸ்ட் எடுத்தது. நீங்களா நானா?"

"ஆப்டர்நூன் க்ளாஸ் அட்டெண்ட் பண்ணலீங்களா?"

"ஏழரைக்கு லாண்ட் ஆக வேண்டிய ப்ளேன் எட்டே முக்காலுக்கு லாண்ட் ஆச்சு. ஒன்பதரைக்கு டிஸெக்ஷன் டேபிள் முன்னால நின்னேன். அதுக்குள்ள நீங்க மயக்கம் அடிச்சு விழுந்து ரகளை பண்ணி ரூமுக்கு வந்துட்டீங்க. ஆமா என்ன ஆச்சு உங்களுக்கு? அதைக் கேக்கத்தான் வந்தேன்."

"ஒண்ணுமில்லே..." நாணப் புன்னகையுடன் அவனுடைய காலணிகளின் பளபளப்பைப் பார்த்தாள். அந்தி நேரத்து ஆகஸ்ட் காற்று அவன் கூந்தலை வம்புக்கு இழுத்தது.

"பிரேதங்களைப் பார்த்துப் பயந்துட்டீங்களா?"

"ம்."

"பி.யு.சி.யில தவளை, கரப்பான் பூச்சி, மண்புழுவையெல்லாம் அறுத்துப் பாத்தப்ப பயந்தீங்களா?"

"இல்லே."

"ஏன் பயப்படலே?"

மௌனமாகப் புன்னகை செய்தாள்.

"அந்த உடம்பு நம்மைப் பொறுத்தவரைக்கும் ஒரு கமலாவோ அல்லது முத்துசாமியோ இல்லே, மேடம். அது ஒரு இயந்திரம். ஏதோ ஒரு காரணத்தால் இயங்காம நின்னுபோன மனித இயந்திரம். அற்புதமாகவும் அழகாகவும் உருவாக்கப்பட்ட சிக்கலான இயந்திரம். ஒண்ணரை வருஷத்துக்குள்ள அதைப் பார்ட் பார்ட்டா கழற்றிப் பிரிச்சு உள்ளே இருக்கிற பாகங்களையெல்லாம் நாம தெரிஞ்சுக்கிறதுக்காகக் கொடுத்திருக்காங்க. அப்படித்தான் நாம நினைச்சுக்கணும்.

"இவன் யாராக இருந்தால், என்ன மாதிரியான தொழில் செஞ்சிருப்பான், இப்படி டிஸெக்ஷன் மேஜைக்கு வந்து சேர்றதுக்காகவா இவனோட அம்மா பத்து மாதம் இவனை வயத்துலே சுமந்து பெத்தான்னு இழிவா நினைக்கக் கூடாது. இறந்த பிறகும் யாருக்கும் உபயோகப்படாம சுடுகாட்டில சாம்பலாப் போகிற லட்சக் கணக்கான மனிதர்களை விட மருத்துவ ஆராய்ச்சிக்காகத் தன் உடலையே தானம் செஞ்சிருக்கிற இவன் எவ்வளவு உயர்ந்தவன்னு நினைச்சுப் பார்க்கணும். கண்களைப் பண்ற மாதிரி நான்கூட ரிசர்ச்சுக்காக என் உடலைத் தானம் பண்ணிடப் போறேன்."

பத்மாவின் நெஞ்சில் திடீரென்று சோகம் கரு மேகமாகக் கவிந்தது.

"உடம்புக்குள்ள புதைஞ்சிருக்கிற இருதயத்தைத் தோண்டி எடுத்துக் கையில வச்சு அதுல எத்தனை சேம்பர் இருக்குன்னு நாம பார்த்துத் தெரிஞ்சுக்கணும். அதை விட்டுட்டு அந்த இருதயத்துக்குள்ள என்னென்ன ஆசைகள் புதைஞ்சு கிடந்திருக்கும்னு கற்பனை பண்ணக் கூடாது.

"எத்தனை தலை, எத்தனை கழுத்து, எத்தனை நுரையீரல் இருக்குன்னுதான் நாம எண்

ணிப் பார்க்கணும். இவனுக்கு நண்பர்கள் யார், விரோதிகள் யார், உறவினர்கள் உண்டான்னு நாம கவலைப்பட வேண்டியதில்லே. இப்படித் தலையில்லாம, காலில்லாம இவன் கிடக்கிறதுக்கு உறவினர் காரணமா தலைவிதி காரணமான்னு ஆராய வேண்டியதில்லே. நமக்கே கூட அந்த உடல் ஏதோ ஒரு வழியில சொந்தமாக இருக்கலாம். ஆபரேஷன் டேபிளுக்கும் போஸ்ட்மார்ட்டம் டேபிளுக்கும் பக்கத்தில் நிற்கிற டாக்டர்கள் உறவுகளைப் பத்தி நினைக்கக் கூடாது. வார்டில படுத்திருக்கிறவன் அண்ணனா இருந்தாலும் நோயாளிதான். அந்நியனா யிருந்தாலும் நோயாளிதான். ட்ரீட்மெண்ட் குடுக்கிறதுக்கு நோயைத்தான் கண்டுபிடிக்கணுமே தவிர உறவுகளை இல்லே. பற்றில்லாத மனசோட பார்த்தா உங்களுக்குப் பயமே வராது. பயந்திருந்தா முத்துலட்சுமி ரெட்டி டாக்டராயிருக்க முடியுமா? மாட்டு வண்டியிலே போயி பிரசவம் பார்த்த ஐடா ஸ்கடர் வேலூர் ஆஸ்பத்திரியைக் கட்டியிருக்க முடியுமா? நைட்டிங்கேல் போர்க் களத்துல...''

பத்மா வசியத்துக்குக் கட்டுப்பட்டவளைப் போல அவனுடைய உதட்டசைவுகளையே அதிசயித்துப் பார்த்தாள். அவன் பேசியது இடையிடையே அவள் செவிகளில் ஏறவில்லை.

''பயப்படாம நாளைக்கு வாங்க. உங்க கூடவே நான் நிக்கறேன். எப்படி உங்களுக்கு மயக்கம் வருதுன்னு பார்த்துர்றேன்.''

பத்மாவுக்குள் விவரிக்க முடியாத மின்சார அதிர்ச்சி பாய்ந்த உணர்வு. ராம்குமாரின் பைக் ஆண்களின் விடுதிக்குப் பின்னே திரும்பி மறைந்தது.

அவளுடைய வாழ்க்கையின் மிகச் சந்தோஷமான பகுதி அந்தக் கணத்தில் ஆரம்பமாகி விட்டது. அந்த மரத்தடியில் கழிந்துபோன தற்காலிகக் கணங்கள், நிரந்தரமான, ஆயுள் முழுக்க நறுமணம் பரப்பும் நினைவுகளை அவளுக்குள் ஏற்படுத்தி விட்டதை அப்போது அவள் உணர்ந்தாளில்லை.

அறைக்குள் திரும்பியதும் தாமதிக்காமல் கண்ணாடிக்குள் முகத்தைப் பார்த்தாள். பகலெல்லாம் படுத்திருந்ததால் முகம் லேசாகக் கனத்திருந்தது.

காலையில் அவனுக்காகவே சிரத்தையாக மைதீட்டி, விழியோரங்களின் கூர்மையை மிகைப்படுத்தினேன்; பெண் ஒப்பனை செய்து காத்திருக்கும்போது இந்த ஆண்கள் எங்கேயோ தொலைந்துபோய் விடுகிறார்கள். அலங்கோலமாக நிற்கும்போதுதான் சோதனைக்காகவே வந்து சேர்கிறார்கள்.

கதவை உட்புறம் தாழிட்டு விட்டு மறுபடியும் படுக்கையில் விழுந்தாள். ராம்குமார் அவள் காதருகே மூச்சு விடாமல் பேசினான்.

டெய்சி மிகவும் தாமதமாக ஏழரைக்கு வந்து கதவைத் தட்டினாள்.

''ஏண்டி இவ்வளவு நேரம்?''

''ஷாப்பிங்'' மார்போடு அணைத்துக் கொண்டு வந்த பொட்டலங்களைத் 'தொப்'பென்று கட்டிலில் போட்டாள். ''எப்படி இருக்கே? சாப்பிட்டாயா?''

''பசிக்குது. போகலாம் வர்றியா?'' என்றாள் பத்மா. பகலில் இருந்த அருவருப்பும் குமட்டலும் அவளை அறியாமல் அவளை விட்டு விலகிப் போயிருந்தன.

''ராம் வந்துட்டாண்டி தெரியுமா?''



முப்பத்தி இரண்டு வருடங்களுக்கு முன்னால் சின்னச் சின்ன வேடங்களில் நடிக்க ஆரம்பித்தேன். ரஹ்மான் சாரிடம் டிராமி தள்ளிக் கொண்டிருந்தேன். அப்போதெல்லாம் கலைவாணர் என். எஸ். கே. ஸ்டுடியோவுக்கு வந்தால் என்னைப் பார்த்துச் சிரிப்பார். கிட்டே வந்து முதுகில் தட்டிக் கொடுப்பார். சட்டைப் பையிலிருந்து கைநிறைய பணத்தை அள்ளிக் கொடுப்பார். 'நடிகனுக்குத் தேவை முகம் மட்டுமல்ல, நல்ல உடல்வாகும் இருக்க வேண்டும். போய்த் திருப்தியாய்ச் சாப்பிடு' என்பார்.

ஒருமுறை ரயில் கடக்கும்வரை லெவல் கிராஸிங்கில் காத்திருக்க வேண்டி இருந்தது. கூடவே திருமதி மதுரமும் இருந்தார்கள்.

'இந்த ரயில் எப்படிச் சத்தம் போடுகிறது சொல்' —என். எஸ். கே.

'சிக்கு புக்கு, சிக்கு புக்கு'ன்னு — இது திருமதி மதுரம்.

'எங்கே அதை வேகமாச் சொல்லு.'

மதுரம் அவர்கள் தொடர்ந்தார்.

'பாத்தியா கடைசியா என்ன வருது? செக் புக்கு! மனிதனுக்குப் பணம்கிறது எத்தனை அவசியம் தெரியுமா? இன்னிக்குச் சேத்து வெச்சாத்தான் தேவைப்படறப்போ செக் புக்ல எழுதிட்டுப் பணம் எடுக்கலாம். இதை உயிரில்லாத ரயிலே சொல்லுது. பாத்தியா?' — வாழ்க்கையின் அத்தனை கோணங்களையும் அனுபவித்து முடித்த ஒரு பெரிய மனிதரின் வைர வார்த்தைகள் அவை.

எஸ். எஸ். சந்திரன் கூறக் கேட்டு

எழுதியவர்: சாருப்ரபா சுந்தர்

புகைப்படம்: திருச்சி பிரசன்னு

## புதுமையான பொழுதுபோக்கு!

● சேலத்து டாக்டர் கஸ்தூரிக்கும் அவரது மனைவிக்கும் பொழுதுபோக்கு விதம் விதமான செடிகளையும், கற்றாழை வகைகளையும் வெளிநாட்டுப் பூச்செடிகளையும் தமது பங்களா பூராவிலும் வளர்த்து வருவதுதான்!

இவர்களிடம் 1200 வகைச் செடிகள் உள்ளன. குரோட்டன்ஸ் வகையில் மட்டும் 100 ரகங்கள். வண்ணமிகு ரோஜாச் செடிகள் ஐம்பது வகை! வீட்டிற்குள் வளரும் நிழல் செடிகளில் ஐம்பது ரகங்கள்.

''இதோ பாருங்கள், இதுதான் ''அந்தூரியம்'' என்னும் அதிசயப் பூச்செடி. இதை 'சிலோன் பூ' என்றும் சொல்கிறார்கள். இதன் பூ ஒரு மாதம் வரை வாடுவதில்லை'' என்கிறார் கஸ்தூரி.

''சார், இந்தப் பக்கம் பாருங்கள் ''ஜிரேனியம்'' என்னும் செடியை. இதன் இலையைக் கசக்கிப் பாருங்கள், இதமான வாசனை வருகிறதா? இதன் இலையில் இருந்து சென்ட் தயாரிக்கிறார்கள்'' என்கிறார் டாக்டர் கஸ்தூரி.

இந்தத் தம்பதி ஐரோப்பா சென்றபோது அபூர்வமான சில விதைகளையும் வாங்கி வந்தார்களாம். ''மான் கொம்பு'' போன்ற இலை விடும் அதிசயச் செடி ஒன்றையும் நமக்குக் காட்டுகிறார் ருக்மணி.

'போன்சை' எனப்படும் ஜப்பானிய முறைப்படி அத்தி மரம், அரச மரம், ஆலமரம் கொய்யா மரம், ஆகியவைகளை மண் சட்டியிலேயே வாமன உருவில் வளர்த்து வருகிறார்கள். ஆலமரம் வளர்ந்து விழுதுகள் கூட இந்தச் சட்டியிலேயே ஏற்படும்'' என்கிறார் டாக்டர் கஸ்தூரி. மாமரத்தைக்கூட இவ்விதம் பூச்சட்டியிலேயே இந்த ஜப்பான் முறைப்படி வளர்க்கலாம் என்கிறார் இவர். இதற்குச்செடி வளர வளர பக்கவாட்டு வேர்களை வெட்டிவிட வேண்டுமாம்.

சேலத்தில் கடந்த மூன்று ஆண்டுகளாக மலர்க் கண்காட்சியில் டாக்டர் கஸ்தூரி தம்பதிக்குத் தொடர்ந்து ரோலிங் ஷீல்டு கிடைத்து வருகிறது. முதல் பரிசையும் இந்த ஆண்டு இவர்களே தட்டிக் கொண்டு சென்றார்கள்.

பேட்டி: வி.எஸ். ராஜகோபால்



''ஊஹூம்!'' என்றான் பத்மா அலட்சியமாக.

''ப்ளேன்ல ஏதோ கோளாறாம். அதனால லேட்டா வந்தான்.''

பத்மா அதைக் காதில் போட்டுக் கொள்ளாதவள் போல, ''மத்தியானம் யார் க்ளாஸ் எடுத்தது மேடமா?'' என்று கேட்டாள்.

''ஆமா. ஸ்லைடு நிறையக் காமிச்சாங்க. நாளைலேர்ந்து கட்டாயமா ஹிஸ்டாலஜி ப்ராக்டிகலுக்கு ரிகார்டும் இயோசின், ஹிமோடாக்ஸின் பென்சில்களும் கொண்டு போகணும்டி.''

''எங்க வாங்கணும்?''

''நம்ம ஸ்டோர்ல இருக்குதாம்.''

காலையில் வங்கிக்குப் போய்ப் பணம் டிராப் பண்ண வேண்டும் என்று பத்மா மனத்தினுள் தீர்மானித்தாள். பாலம் பத்திரிகை மருத்துவக் கல்லூரிக்குப் பக்கத்தில் இருக்கும் வங்கியில் பத்மா பெயரில் ஆயிரம் ரூபாயை நிரந்தர முன்பணமாகப் போட்டு வைத்திருந்தது.

அடுத்த சிலமாதங்களை பத்மா படிப்பிலும் பகல் கனவுகளிலும் செலவழித்தாள். நள்ளிரவில் எழுந்து டெய்சியின் கட்டிலுக்குக் கீழே இருக்கும் பெட்டிக்குள் துணிச்சலுடன் கைவிட்டு எலும்புகளை எண்ணி மனித உடலில் சரியாக இருநூற்றி ஆறு எலும்புகள் உள்ளன என்று உறுதிப் படுத்திக் கொண்டாள். வாயிலிருந்து ஆரம்பிக்கும் உணவு மண்டலத்தின் நீளம் முப்பத்திரண்டு அடியா என்று ராம்குமார் ஆச்சரியப்பட்டான். தைராக்ஸின்ஹார்மோனில் அயோடின் இருந்ததை பயோ கெமிஸ்ட்ரி ஆய்வுக் கூடத்தில் டெய்ஸி தெரிந்து கொண்டாள். லிவர் தான் உடம்பிலேயே மகா பெரிய உறுப்பு என்பதையும் 'ஸைனோ ஏட்ரியல் நோட்' தான் இதயத் துடிப்பு ஒலிக்கத் தொடங்கும் இடம் என்பதையும் எல்லாரும் ஒத்துக்கொண்டனர்.

இரவில் பத்மா ஜன்னலோரம் படுத்து உறக்கம் வரும்வரை வானத்தைப் பார்த்துக்கொண்டிருப்பாள்.

வானம் ஏன் இப்படி அசாத்திய உயரத்தில் இருக்கிறது?... ராம்குமார், நீ அசாதாரணமானவன். எனக்காக ஒரு முழு புதிய உலகத்தையேநிர்மாணித்துத்தந்தவன். அப்பா! என்னை எங்கேயிருந்து இந்த விசித்திரமான உலகத்துக்குக்கொண்டு வந்தீர்கள்? ராம் நீ இந்தப் பிரபஞ்சத்தின் இளவரசன் போலவும்... நட்சத்திரங்களை யார் வானத்தில் பதித்தது?... நான் படிக்கும் வகை வகையான நாவல்களின் நாயகன் போலவும் தினமும் ஒரு புது முகத்தை எனக்குக் காண்பிக்கிறாயே எப்படி?... மெஸ்ஸில் ஏன் ஒரு வாரமாக பீட்ரூட் போட்டுப் போரடிக்கிறார்கள்? ராம் என்னைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

மாமூலான கடைசிச் சந்தேகத்துடன் உறக்கத்தில் அமிழ்ந்து விடுவாள். (தொடரும்)

# இன்ஸேலாம் வியாவாமே அது என்ன?



✖ முரளிதரன்



✖ ஸ்ரீதர் பாலாஜி

**ஆரஞ்சுச் சூரியன் வானத்தை விட்டு மெல்ல நழுவும்நேரம் பனகல் பார்க் பச்சை நிறப் புல்வெளியில் க்விஸ் ஆரம்பமாகியது. கலந்துகொண்டவர்கள்:**

**பி. சுரமஞ்சரி**
**எம். எஸ். மத்லூபா**
**(ராணிமேரிக் கல்லூரி மாணவிகள்)**

**ஆர். முரளிதரன்**
**ஸ்ரீதர் பாலாஜி**
**ஏ. எம். ஜெயின் கல்லூரி மாணவர்கள்**

**பூவா தலையா போட்டதில் வெற்றி பெற்றது மாணவிகள்.**

ஹாலந்தின் மற்றொரு பெயர் தெரியுமா?

'டக்'கெனப் பதில் சொன்னார்கள் மாணவர்கள்.

விடை: நெதர்லாண்ட்.

பத்துப் பாட்டுக்கள் என்று இலக்கியத்தில் படித்திருப்பீர்களே: அவைகள் என்னென்ன? —மாணவர்கள் வீசிய கேள்விக் கணை.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப் படை, முல்லைப் பாட்டு.... இதற்கு மேல் விடை தெரியாமல் முழித்தனர் மாணவிகள்.

மீதி ஆறு பாடல்களையும் மாணவர்கள் சொன்னார்கள்.

விடை: பெரும்பாணாற்றுப்படை, மதுரை காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம்..

அடுத்து மாணவர்கள் சான்ஸ். சிலர் மந்திரிகளாக இருந்தாலும் எந்த இலாக்காவும் கொடுக்கப்படாமல் இலாக்கா இல்லாத மந்திரிகளாக (Minister without Portfolio) இருப்பார்கள். அவர்களது பணி என்ன?

மாணவர்கள் முழிக்க, மாணவிகள் பதில் சொன்னார்கள்.

விடை: மந்திரி சபை, பிரதம மந்திரியின் தலைமையில் இயங்குவதால் பிரதமர் என்னென்ன பணிகளை (அது எந்த இலாகாவைச் சேர்ந்ததாக இருந்தாலும் சரி) கவனிக்கச் சொல்கிறாரோ அவைகளைக் கவனிப்பதே இலாக்கா இல்லாத மந்திரிகளின் வேலை.

இப்போது கேள்வி கேட்கும் வாய்ப்பு மாணவர்களுக்கு.

விளையாட்டு வீரர்களுக்கு மத்திய அரசால் வழங்கப்படும் விருதின் பெயர் தெரியுமா?

இரண்டு நிமிஷம் மண்டையைக் குடைந்து விட்டுத் தெரியாது என்றார்கள் மாணவிகள். விடையைச் சொன்னார்கள் மாணவர்கள்.

விடை: அர்ஜுனா விருது.

மாணவிகள் இருவரும் கை கோத்துக் கொண்டு திரையுலக சம்பந்தப்பட்ட கேள்வியைக் கேட்டனர்.

சமீபத்தில் டெல்லியில் நடந்த உலகத் திரைப்பட விழாவில் சிறந்த படமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது எது?

'தெரியாது' என்று சற்றும் யோசிக்காமல் கூறினார்கள் மாணவர்கள்.



✖ எம். எஸ். மத்லூபா



✖ பி. காயத்ரி

**பொது அறிவுப் பக்கங்கள்**

# புள்ளிகள் கையெழுத்து!

## பரிசு ரூ. 250

சில புள்ளிகள் தங்கள் பெயர்களை இங்கே இடது கையால் எழுதியுள்ளனர்.

துரை முருகன்
பொன்மணி வைரமுத்து
சௌந்தரா கைலாசம்
பத்மா சுப்ரமணியம்
சி. ஜீபால்
கோமதி சீனிவாசன்
பட்டுக்கோட்டை பிரபாகர்
உசிலைமணி

இவற்றில் ஐந்து மட்டும்தான் பெயருக்குரியவர் தம் கைப்பட எழுதியவை. மீதி மூன்று நம்நிருபர் செய்த திரிசமன். உண்மையான ஐந்து கையெழுத்துக்கள் எவை?

கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள். ஐந்து பெயர்களையும் சரியாக எழுதினால் பரிசு ரூ. 250. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பிரித்தளிக்கப்படும். பத்துப் பேருக்கு மேல் சரியாக எழுதினால் குலுக்கல் முறையில் பத்துப் பேர் தேர்ந்தெடுக்கப்படுவர். முடிவுதேதி 30-5-83.

உறையின் மேல் ''புள்ளிகள் கையெழுத்து'' என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும்.

கருத்து: மௌலி

1. ______________________

2. ______________________

3. ______________________

4. ______________________

5. ______________________

என் பெயர்:

விலாசம்:

கையெழுத்து:

விடை: எந்தப் படமும் சிறந்த படமாகத் தேர்ந்தெடுக்கப்படவில்லை.

அடுத்து மாணவர்கள்:

1981 சென்ஸஸின்படி இந்தியாவின் ஜனத்தொகை என்ன?

68 கோடி என்றனர் மாணவிகள். சரியான விடை சொல்லவும் என்றார்கள் மாணவர்கள்.

தெரியவில்லை என்று தலையாட்டிவிட்டனர் மாணவிகள்.

விடை: 68.38 கோடி.

''இன்ஸோம்னியா'' என்றால் என்ன?

மாணவர்கள் சரியாகச் சொல்லிவிட்டனர்.

விடை: தூக்கம் வராமல் அவதிப்படுவதைத்தான் ''இன்ஸோம்னியா'' என்று குறிப்பிடுவார்கள்.

அடுத்தது மாணவிகள்:

(OPEC) என்றால் என்ன?

Organisation of Petrolium Exporting Countries) என்று சரியான விடையைச் சொன்னார்கள் மாணவர்கள்.

துணைக் கேள்வி போட்டனர் மாணவிகள்.

அந்த அமைப்பு சமீபத்தில் எடுத்த முக்கியமான முடிவு என்ன?

தெரியாது என்றனர் மாணவர்கள்.

விடை: 1000 பேரல் குரூட் ஆயிலுக்கு ஐந்து டாலர் விலை குறைப்பு.

''சென்னை நகருக்குக் குடிநீர் தேவைக்கு கிருஷ்ணா நதியிலிருந்து எந்தெந்த மாநிலங்கள் தண்ணீர் கொடுக்கச் சம்மதித்துள்ளன? -- மாணவர்கள் கேள்வி.

மாணவிகளுக்குத் தெரியவில்லை.

விடை: மகாராஷ்டிரா, கர்நாடகா, ஆந்திர மாநிலங்கள். ஒவ்வொரு மாநிலமும் ஐந்து டி.எம்.ஸி. தண்ணீர் தருவதாக ஒத்துக்கொண்டிருக்கின்றன.

இந்த முறை மாணவர்கள்:

பங்களா தேஷின் அதிபர்....? என்று கேள்வியை முடிப்பதற்குள் பதில் வந்தது மாணவர்களிடம்.

விடை: லெப்டினண்ட் ஜெனரல் எச். எம். எர்ஷாட்.

எப்படியும் மாணவர்களை இந்தக் கேள்வியில் மடக்கிவிடுவது என்று தீர்மானித்து யோசித்து ''பாரத ரத்னா'' விருது பெற்ற பிரதமர் யார்? என்றனர் மாணவிகள்.

சற்றும் தயங்காமல் பதில் வந்தது மாணவர்களிடமிருந்து.

விடை: இந்திரா காந்தி.

ஸ்கோர் போர்ட்

| | |
|---|---|
| ஏ.எம். ஜெயின் | 7½ |
| ராணி மேரி கல்லூரி | 3½ |

வெற்றி பெற்ற ஏ. எம். ஜெயின் கல்லூரி மாணவர்களுக்கு 'கல்கி'யின் அன்பளிப்பாக 30 ரூபாய் வழங்கப்பட்டது. மற்றும் கலந்து கொண்ட நால்வருக்கும் புத்தகங்கள் பரிசாக வழங்கப்பட்டன.

தொகுப்பு: மௌலி, ப்ரியன்

படங்கள்: சுபா

# மசாலா!

கிரிக்கெட் ஆட்டத்தில் ஆட்டக்காரர்கள் 'ரன் அவுட்' ஆவது சகஜம்.

ஆனால் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் தலைவரும் மத்திய அமைச்சருமான என்.கே.பி. சால்வே 'ரன் அவுட்' ஆனதுதான் சுவாரசியமான விஷயம்!

சால்வே அவர்களுக்கு மேற்கிந்தியத் தீவுகளில் நடந்த நாலாவது டெஸ்ட் பந்தயத்தைப் போய்ப் பார்க்க ஆசை. அதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு, ராஜஸ்தான் மாநிலத்தில் சில அரசு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள அவசரம் அவசரமாகப் போனார். உதயப்பூரிலிருந்து தனியார் விமானம் ஒன்றில் அமர்ந்து டில்லிக்குத் திரும்பினார். எல்லாம் ரெடி! டெஸ்ட் பந்தயம் பார்க்கக் கிளம்பும் நேரத்தில் பிரதமரிடமிருந்து, இந்தப் பிரயாணத்தை ரத்துச் செய்துவிட்டதாகத் தகவல் வந்தது!

கிரிக்கெட் என்றதும் முன்னாள் ஆட்டக்காரர் சந்திரசேகர் ஞாபகம் வருகிறது.

சந்திரசேகருக்கு நண்பர்களிடம் பந்தயம் கட்டுவதில் ஓர் ஆனந்தம். ஒரு பந்தயம் துவங்குவதற்கு முன் இவர் இவ்வளவு விக்



சந்திரசேகர்

கெட்டுகள் வீழ்த்துவார், இவர் இவ்வளவு ரன்கள் எடுப்பார் என்று தம் ஆட்டத் தோழர்களுடன் பந்தயம் கட்டுவார்.

ஒரு சமயம் டில்லியில் டெஸ்ட். அப்போது காவஸ்கர், டெஸ்ட் பந்தயங்களில் முதல் ஆயிரத்தை எட்டவில்லை. இன்னும் எண்பத்தி ஐந்து ரன்கள் பாக்கி.

சந்திரசேகர் கவாஸ்கரை அணுகி, ''இந்த டெஸ்டில் நிச்சயமாக நீ ஆயிரத்தை எட்டுவாய். நான் பந்தயம் கட்டுகிறேன்'' என்றார்.

கவாஸ்காருக்கு அன்று மனத்தில் அவ்வளவு நம்பிக்கை இல்லை. அதுவரை பிரோஷ் ஷா கோட்லா மைதானத்தில் அவர் அதிகமாக ரன்கள் எடுத்ததில்லை. யோசித்தார். சந்திரசேகரோ பந்தயத் தொகையை மேலும் உயர்த்தினார்.

கவாஸ்கர் பந்தயத்துக்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. ஜெயித்தது சந்திரசேகர்! கவாஸ்கருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் அவர் பண நஷ்டத்தைப் பொருட்படுத்தவேயில்லை. சந்திரசேகரைக் குறிப்பிடும்போது கவாஸ்கரே இந்தச் சம்பவத்தைச் சொன்னார்.

உலகிலுள்ள இரண்டு உயரமான கட்டிடங்களுமே அமெரிக்காவில்தான் இருக்கின்றன.

நியூயார்க் நகரிலுள்ள வோர்ல்ட் டிரேட் சென்டர் உயரம் 1350 அடி.

சிகாகோ நகரில் உள்ள சியர்ஸ் டவர் 1454 அடி.

டாக்காவில் பிறந்து கல்கத்தாவில் படித்து அமெரிக்காவில் உலகப் புகழ் பெற்ற டாக்டர் ஃபசுர் ரஹ்மான், சியர்ஸ் டவருக்கான வரைபடம் போட்டுத் தந்தவர். கட்டிடம் உருவான ஆண்டு 1973.

சியர்ஸ் டவர்தான் இன்று உலகிலேயே மிக உயரமான கட்டிடம் அதன் உச்சியில் டெலிவிஷன் ஒலிபரப்பும் சாதனத்தை நிறுவும் பணியில் ஈடுபட்டுள்ள தொழிலாளி



-பட்டினத்தார்



# சாவி

அன்னம்

பத்திரிகையில் வெளியான ஒரு சிறு கதையில் வந்த சம்பவம் – கல்யாணியின் வாழ்க்கையிலும் நடந்தது.

அந்தக் கதையைப் பத்திரிகையில் படித்த போது, ''இப்படியும் ஒரு மனிதர் இருப்பாரா?'' என அவள் யோசித்ததுண்டு. ''இதோ இருக்கிறேன், பார்த்துக்கொள்!'' என்பது போல் வந்து வாய்த்திருந்தான், அவள் கணவன் ரவி.

''பேசியபடி கோத்ரெஜ் அலமாரி –கண்ணாடி வைத்தது – வந்தால் தான் சோபன அறைக்குள் போவேன்!'' என்று இட்ட வட்டமாகக் கூறிவிட்டான் ரவி.

கல்யாணியின் தகப்பனார் கெஞ்சிப் பார்த்தார். கல்யாணியின் அண்ணா நமஸ்காரமே செய்தான். ரவி இணங்கவில்லை.

இரவோடு இரவாக – உழவு மாடுகளை வந்த விலைக்கே விற்று – முப்பது மைல் தள்ளி இருந்த திருச்சியில் பத்து மணிக்கு மேல் கடையைத் திறக்க வைத்து–ஸ்டீல் பீரோ வந்து இறங்கிய போது – காலை மணி இரண்டு!

தூக்கக் கலக்கத்தில் இருந்த எல்லோரும் எழுந்து – சம்பிரதாயம் ஏதும் குறை வைக்காமல் – கல்யாணியைச் சோபன அறைக்குள் தள்ளியபோது மணி மூன்று.

நினைத்ததைச் சாதித்து விட்ட உற்சாகத்துடன் ரவி படுக்கையில் உட்கார்ந்திருந்தான் திமிராக.

கல்யாணி நுழைந்தாள். அவள் வலது கையில் பால் டம்ளர். இடது கை சுண்டு விரலிலிருந்து அலமாரியின் நான்கு சாவிகள் குரோமியம் பூச்சுடன் 'ஜலங், ஜலங்' எனச் சப்தித்தன.

பால் டம்ளரை ரவியின் கையில் கொடுத்தாள். அவன் கால்களில் விழுந்து நமஸ்கரித்தாள். படுக்கையில் அமர்ந்திருந்தபடியே பாலைப் பருகிக் கொண்டு இருந்தான் ரவி.

கல்யாணி படித்திருந்த கதையில், –இதே போல் ஒரு சந்தர்ப்பத்தில் அந்தக் கதாநாயகி செய்தது அவள் கவனத்திற்கு வந்தது. அவள் நெஞ்சை ஆழமாகப் பாதித்திருந்தது அந்தக் கதை.

சட்டென்று அந்தச் சாவிகளைக் கழற்றிப் படுக்கையின் மீது எறிந்தாள்.

''என்னைவிட – என் மனத்தை விட – இந்தச் சாவிகள்தானே உங்களுக்குப் பெரிதாகப் போயிற்று?... ம்.... வைத்துக் கொண்டு ஆனந்தமாகத் தூங்குங்கள்'' என்றாள்.

அவன் பாதி பருகிய பின்னர் அவளிடம் நீட்டிய பால் டம்ளரைக் கையால் தொடாமல் வெளியே நடந்தாள்.

கதவுகள் திறக்கப்பட்டு, புதுப் புடவை கூட மாற்றாமல் அவள் வெளியே வந்ததும் எல்லாருமே திகைத்துப் போனார்கள்.

''என்னம்மா நடந்தது?'' என்று கேட்டாள் தாய்.

''இன்னும் என்னம்மா குறை?'' என்று அழமாட்டாத குறையாகக் கேட்டார் அவள் தந்தை. ''என்ன வேண்டுமாம் துரைக்கு?''

''இன்னும்.....!'' என்று துடித்தான் அண்ணன்.

தயாரிப்பாளர்: (ப்ரீ வியூ தியேட்டரில்)
''என்ன இது, படத்துல டைட்டில் காண்பிச்ச பிறகு 'சுபம்'னு போட்டிருக்கு?''
டைரக்டர்: ''இந்த ரெண்டு வரிதான் சென்ஸார் கத்திரிக்குத் தப்பிச்சது! மற்றதை யெல்லாம் மாற்றி அமைக்கணுமாம்.''

–செம்பூர் சந்துரு



கல்யாணி பதில் ஏதும் சொல்லவில்லை. கழுத்திலிருந்த மாலையைக் கழற்றி மாட்டி விட்டு வெறும் தரையில் படுத்துக்கொண்டாள்.

நடந்ததை ஜீரணிக்க ரவிக்கு இரண்டு நிமிஷங்கள் ஆயிற்று. என்ன திமிர்? என்ன ஆணவம்?... எப்படி உதாசீனப்படுத்திவிட்டாள்?... இந்த ஜன்மத்தில் இவளுடன் குடித்தனம் நடத்துவதா? கொழுப்பை அடக்கியே ஆகவேண்டும்!

வெளியே வந்தவன் தன் வீட்டு மனிதர்களை எழுப்பினான். நடந்த விஷயத்தைச் சொன்னான் — சுருக்கமாக.

அவன் அப்பா கோபாவேசத்துடன் எழுந்தார். ''அத்தனை கேவலமாகப் போயிற்றா?... எல்லோரும் எழுந்திருங்கள்... மூட்டையைக் கட்டுங்கள்... இந்த வீட்டுச் சகவாசமே வேண்டாம்!'' என அதட்ட ஆரம்பித்தார்.

ரவியின் மாமா தம் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். ''காலை நாலரை மணிக்கு முதல் பஸ்... ரோஷம் உள்ளவராக இருந்தால் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட இங்கே சாப்பிடக்கூடாது'' என்றார் உக்ரமாக.



நடந்த விவரம் கல்யாணியின் வீட்டிற்குப் புரிந்தது.

அவள் அம்மா அவளை எழுப்பினாள். ''பெண்கள் இப்படி நடந்து கொள்ளலாமா? அவர்கள் புறப்பட்டுப் போகிறார்கள் பார்... போய்க் காலில் விழுந்தாவது நிறுத்துடி!'' எனக் கதறினாள். கல்யாணி அசைந்து கொடுக்கவில்லை.

கல்யாணியின் அண்ணன் — இன்னும் சில நாட்களில் பெரிய அதிகாரியாகப் போகிறவன் — தன் படிப்பு, மரியாதை அத்தனையையும் துறந்து ரவியிடம் மன்றாடிக் கொண்டிருந்தான்.

''இதோ பாருங்கள்!... அவள் சின்னப் பெண்... காலேஜில் படித்தவள்... ஏட்டுச் சுரைக்காய் அவள் புத்தியைப் பாதித்திருக்கிறது. செய்தது தப்புத்தான்... அப்படிப் பேசியது குற்றம் தான்... கொஞ்சம் பெரிய மனசு வையுங்கள்! ப்ளீஸ்!''

இவன் கெஞ்சக் கெஞ்ச அவர்கள் முறுக்கு இன்னும் இறுகியது. மூட்டைகள் கட்டப்பட்டு வாசல் வராந்தாவிற்கு வந்தன.

''உனக்கு என்னடி ஆயிற்று, பாவிப் பெண்ணே!... வாயைத் திறந்து பேசேண்டி!'' என அவள் முதுகில் ஓங்கி வைத்தாள் அவள் தாய்.

''இதற்கா இத்தனை சிரமப்பட்டேன்?... ஒரு நிமிஷ வேகத்தில் அத்தனையையும் நாசமாக்கி விட்டாளே!'' என்று தலையில் போட்டுக் கொண்டார் அவள் தந்தை.

சம்பந்தி வீட்டார் எல்லோரும் அநேகமாக வாசலுக்கு வந்து விட்டார்கள். வண்டி கொண்டு வர ஆள் போயாகி விட்டது.

ரவி சுற்றுமுற்றும் பார்த்தான். ''அம்மா எங்கே?'' என்று விசாரித்தான்.

''இங்கேதாண்டா இருக்கிறேன்!'' என்று குரல் வந்தது அவன் தாய் காவேரியிடமிருந்து. அவள் புறப்படுவதற்கு எந்த ஆயத்தமும் செய்து கொள்ளவில்லை. முகம் கழுவவில்லை. தன் பொட்டைச் சீர்திருத்தவில்லை. கலைந்து கிடந்த கேசத்தைக் கூட சரியாக்கவில்லை.

''என்ன இது?... மசமசாவென்று நிற்கிறாய்?... எல்லோரும் புறப்பட்டாகி விட்டது?... நீ மட்டும்...'' என்று கடிந்து கொண்டார் ரவியின் அப்பா.

''நான் புறப்படுவதாக இல்லை!...'' என்றாள் காவேரி தீர்க்கமாக.

''என்ன?'' என்று இரைந்தார் அவர். அவள் பொருட்படுத்தவில்லை.

''நான்தான் கேட்கிறேன் — அவன்— கல்யாணி — என் மருமகள் — நீ காலையில் அக்னி சாட்சியாகத் தாலி கட்டிய மனைவி என்ன தப்பு செய்து விட்டாள்?... எதற்காக இப்படித் ''தாம் தூம்'' என்று குதிக்கிறீர்கள்?... இந்தக் கல்யாணம் நிச்சயமான நாள் முதல் — அந்தக் குழந்தை— அவளும் மனித ஜன்மம் தான் — என்னவெல்லாம் எண்ணி எண்ணிப் பூரித்துப் போயிருப்பாள்?... உன்னைப் பற்றி எப்படியெல்லாம் நினைத்துப் பார்த்திருப்பாள்?... பெண்ணாகப் பிறந்தால் அவளுக்கு மட்டும் பகவான் ஹிருதயத்தை வைக்க மறந்து விட்டானா?... அவள் நினைத்தது என்ன?... நடந்தது என்ன?... கேவலம் இரும்பு பீரோ — மழையிலும் வெயிலிலும் கிடந்தால் துருப் பிடிக்கும் ஒரு பெரிய 'தகர டப்பா'—அந்தப் பீரோவில் எதை வைக்கப் போகிறீர்கள்?... நிச்சயம் அந்த இரும்பு உங்கள் மனத்தைப் போல் அத்தனை உறுதியாக இருக்காது.''

ரவி திகைத்துப் போய் நின்றான்.

''அம்மா... நீ...'' எனக் கிட்ட வந்து அழைத்தான்.

''என்னைக் கூப்பிடாதேடா... அவளைப் போய்க் கூப்பிடு... இன்னும் விடியவில்லை. நல்ல பொழுது தாண்டவில்லை... வீட்டுக்கு வந்த மகாலட்சுமியைக் கண் கலங்க வைக்காதேடா...''

ஆவேசம் வந்தது போல் அவள் பேசவும் அத்தனை பேரும் மௌனமாகத் திரும்பினார்கள். ரவியின் அப்பா கோபத்துடன் தம் அங்கவஸ்திரத்தை உதறிக் கீழே போட்டு விட்டு — எதிலும் பட்டுக் கொள்ளாமல் தனியாகப் போய் நின்றார்.

ரவி நிதானமாகக் கல்யாணியின் அருகே போய்க் குனிந்தான்.

''கல்யாணி!... ஐ ஆம் ஸாரி... ப்ளீஸ்!'' என அழைத்தான். அவள் நிமிர்ந்து பார்க்கவில்லை. நீட்டிய அவன் கரத்தைப் பற்றவும் இல்லை.

காவேரி நெருங்கி வந்தாள். கல்யாணியின் பக்கத்தில் உட்கார்ந்தாள். அவள் தலையைத் தூக்கித் தன் மடியில் போட்டு நெஞ்சுடன் இணைத்துக் கொண்டாள்.

''தப்புத்தாண்டி குழந்தை... பெரிய தப்புத்தான்!... நீ ஒரு கொத்துச் சாவி தானே கொடுத்தாய்?... இதோ பார்... இது எங்கள் வீட்டுச் சாவிக் கொத்து... அத்தனையும் உன்னுடையது. எடுத்துக் கொள்ள உனக்குப் பூரண உரிமை உண்டு... அந்த உரிமையைத் தந்த ரவியைப்போனால் போகிறது என்று மன்னிக்க மாட்டாயா?... குற்றமும் குணமும் ஒரு இடத்திலதாண்டி இருக்கும்.''

கல்யாணி எழுந்தாள்... முதல் முதலாக வாயைத் திறந்தாள். ''என்னை நீங்கள்தான் மன்னிக்கணும்... ஏதோ ஆவேசத்தில் வெறி பிடித்தவள் போல் நடந்துகொண்டு விட்டேன்!'' — என விம்மினாள்.

அவள் கண்களைத் துடைத்த காவேரி... ''உம் அசடு... இனிமேல் அழக்கூடாது... அடுத்த வருஷம் எங்கள் வீட்டில் உன் குழந்தைதான் அழ வேண்டும்'' — எனக் கூறியவள்,

''உம்... கூட்டிக் கொண்டு போ!'' என்றாள் ரவியிடம்.

ரவி அவள் கரத்தைப் பற்றிய போது கல்யாணி விடுவித்துக் கொள்ளவில்லை. தன்னிடமிருந்த சாவிக் கொத்தைக் காவேரியிடம் நீட்டினாள்.

''வேண்டாம்டி அம்மா... பொல்லாத சாவி... உன்னிடமே இருக்கட்டும்'' என்றாள் காவேரி.

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!




**நைஸில்**
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர.






**வாங்குவீர் நைஸில். விரட்டுவீர் வியர்க்குருவை. பால்கம் பவுடரைவிட குறைந்த விலையில்!**



மருந்துக் கலவை யுள்ள நைஸில்:

1. அதிக வியர்வை யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற் படுத்தும் கிருமி களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத மளிக்கிறது.

# முத்தான 3 வாய்ப்புகள்!



மே '83

**10**
செவ்வாய்
வரிசை : எல்யூ & எல்வி
106வது குலுக்கல்
வெளியிடும் நாள் :
30.4.83

**20**
வெள்ளி
எல்டபிள்யூ & எல்எக்ஸ்
107வது குலுக்கல்
வெளியிடும் நாள் :
10.5.83

**30**
திங்கள்
எல்ஒய் & எல்இசட்
108வது குலுக்கல்
வெளியிடும் நாள் :
20.5.83
அன்றே விற்பனைக்கு
113வது சிறப்பு
குலுக்கலுக்கான சீட்டுகள்
எம்ஐ, எம்ஜே & எம்கே
வரிசைகளும்
வெளியிடப்படுகிறது

முக்கனி, முப்பால், முத்தமிழ்,
இதன் வரிசையிலே இனி மற்றுமோர் முத்திரை !

## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு

மாதம் மும்முறை

10, 20, 30 தேதிகளில் வழங்கும் முத்தான வாய்ப்பு!

**இரண்டு முதல் பரிசுகள் ரூ. 100000 வீதம்**

மற்றும் ஏராளமான பரிசுகள்! தாராளமான வாய்ப்புகள் !!
விரைந்திடுவீர் ! வாங்கிடுவீர் !! வென்றிடுவீர் !!!

DIPR/304/83

இயக்குநர், தமிழ்நாடு பரிசு சீட்டு திட்டம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.

# பிள்ளை வரம்

விவாகரத்துக்குப் பிறகு டாக்டர் சுரேஷ்குமார் வர்மாவுக்குப் புற்று நோய் வருகிறது. தம் பிள்ளைகளைப் பார்க்கவேண்டுமென்று மரணப்படுக்கையில் உயிர் துடிக்கிறது. மனைவியோ பிள்ளைகளை அனுப்பமறுத்து விட்டாள். அப்படி அனுப்பாதவளுக்கு அனுப்பிய கடிதமாக இந்தக் கவிதை மடல்.

ஏப்ரல் 29 — செய்தி



✖ சுரேஷ்குமார்

ஆழ மான பெண்ணுனக்கு
  இதயம் உள்ளதா? — என்

நீள மான பெயர்உ னக்கு
  நினைவில் உள்ளதா?

இடையில் வந்த காலம் நம்மை
  இரண்டு செய்தது — இந்தக்

கடைசி நேரக் கடிதம் எந்தன்
  உயிர் சுமந்தது.

மரணம் என்னும் பாம்(பு) என்னுள்
  புற்று வைத்தது — பிள்ளை

வரட்டும் என்றே உயிரில் கொஞ்சம்
  விட்டு வைத்தது.



கருகிப் போன போதும் நானுன்
  கணவன் இல்லையா? — அடி

மரணம் காட்டும் கருணை கூட
  உனக்குள் இல்லையா?

இறந்த காலம் எனக்கு மீண்டும்
  இருந்தால் நிம்மதி! — ஓ

பறந்து போன கிளியே என்னைப்
  பார்க்க அனுமதி!

உலக வாழ்வும் உறவும் இங்கே
  அழுகுப் பொய்யடி — என்

சலவை செய்த நிலவி ரண்டை
  அனுப்பி வையடி!

சுற்றிச் சுற்றி மொய்ப்ப தென்ன
  சோக நினைவுகள் — என்

ஒற்றைக் கண்ணில் ஒழுகும் நீரில்
  உயிரின் கசிவுகள்.

வட்ட நிலவு ரெண்டு வருமா
  எட்டிப் பார்க்கிறேன் — என்

கட்டி லோடு உயிரைக் கொஞ்சம்
  கட்டி வைக்கிறேன்.

டாக்டர் சுரேஷ் குமார் படம் நன்றி:
தினமணி

# வேடதாரிகள்

## தமிழன்பன்

மாலைகளால் திக்குமுக்காடிப்போனார் திருவாசகம்பிள்ளை. ஆசிரியர் சங்கச் செயலாளர் ஆராவமுதன் ஒரு பொன்னாடையை விரித்துக் கொண்டு 'இதை நம் பள்ளி நிர்வாகி வள்ளல் சென்னியப்பர் தம் பொன்னான கரங்களால் நம் தலைமையாசிரியருக்குப் போர்த்துமாறு மிகப் பணிவன்போடுகேட்டுக் கொள்கிறேன்' என்று விடுத்த வேண்டுகோளை நூறு நூறு கைகளின் ஒலியலைகள் ஆமோதித்தன.'

கேமிராக்களின் 'கிளிக்குகளில்' திருவாசகம்பிள்ளை புன்னகையில் நிர்வாகி சென்னியப்பரின் புன்னகை சங்கமமானதைக் கண்டு அங்கிருந்தவர்களில் பலரும் புளகாங்கிதம் அடைந்தனர்.

''எழுத்தறிவித்தவன் இறைவன்'' என்பார்கள், நம் முன்னோர்கள். இறைவன்மார் பலருக்குத் தலைவரான நம் திருவாசகம் பிள்ளையால் இந்தக் கல்விக் கோயில் பெருமைப்படுகிறது. பள்ளி நிர்வாகம் மட்டுமே நம் தலைமையாசிரியரின் நேர்மை, திறமை ஆகியவற்றை இதுவரை பாராட்டியது. இப்போது அரசாங்கமே பாராட்டி விருது வழங்கிவிட்டது. வசிஷ்டர் வாயால்.. என்னமோ சொல்வார்களே'' என்று சென்னியப்பர் தடுமாறிய போது தலைமைத் தமிழாசிரியர் வடிவழகர், பிரம்மரிஷியை ஆதரவாய் அவருக்கு அனுப்பி வைத்தார்.

அடுத்து, வடிவழகர் படிக்கத் துடித்துக் கொண்டிருந்த பாராட்டு மடலின் நேரிசை வெண்பாக்களை அரங்கேற்றிய போது வெண்பா எழுதுவதை விடக் கேட்பது எவ்வளவு சிரமம் என்பதை அவர் அபாரமாக வெளிப்படுத்தினார்.

அந்த விழா முடிந்து, மாணவ மாணவிகள் விடுதலை பெற்றுக் கலைந்துபோனதும், ஆசிரியர்கள் சிலரும், மற்றும் கட்டிடக்குழு உறுப்பினரில் சிலரும், நிர்வாகி சென்னியப்பர் பக்கமாக முன்னேறி 'ரொம்ப நல்லா இருந்தது உங்க பேச்சு' என்று சொல்லத் துடித்துக் கொண்டிருந்தனர்.

புலவர் வடிவழகர் தலையைச்சொறிந்தபடி 'ஐயாவைப் பற்றியும் இருபது வெண்பா எழுதியிருக்கிறேன். ஐயா அதைக்கேட்டு என்னைப் பெருமைப்படுத்தணும்' என்று தம் பற்களையும் அவ்வேண்டுகோளுக்கு ஆதரவாக விளம்பரப்படுத்தினார்.

''அதுக்கென்னய்யா கேட்டாப் போச்சு' என்று ஓர் அலட்சியப் பதிலை அவருக்குத் தந்து விட்டு நகர்ந்த சென்னியப்பர் முன் உடற்பயிற்சி ஆசிரியர் இராமநாதன், ''சார்கிட்டே ஒரு ரிக்வெஸ்ட்'' என்றார். என்ன? என்பதை சென்னியப்பர் பார்வையில் பதிலாக்கினார். 'எச். எம். எனக்கு ஒரு மெமோ கொடுத்திருக்கார். அதை 'வித்ட்ரா' பண்ணிக்கும்படி அவர்கிட்டே சொல்லணும். ''எய்யா இதெல்லாம் எங்கிட்டே எதுக்கையா சொல்லோணும்? எச். எம். கிட்டேயே சொல்லக்கூடாது?''



அதற்குள் எச்.எம். அவர் அருகே வந்து விட்டார்.

''என்னய்யா இது...? மெமோ இமோங்கிறார்.''

''அப்புறமா அதைப்பத்தி உங்க கிட்ட சொல்றேங்க'' என்றார் எச். எம்.

''சரி சரி.... அப்புறம் பார்த்துக்கலாம்யா...'' என்று சென்னியப்பர் இராம

நாதனிடம் சொல்லி விட்டு, அவரைக்கடக்கும் நடையில் ஒரு கர்வத்தை வெளிப்படுத்தினார்.

''சார்! நீங்க — வந்து என்னைப் பத்தித் தப்பாநெனைச்சிக்கப்படாது...''என்றுஇராமநாதன் மறுபடியும் அவர் பின்னால் நடந்தபடி தொடர முயன்றபோது. ''இதோ பார்யா... எனக்கு யோக்யமான —திறமையான வாத்தியார்கள் தான் வேணும்'' என்று சென்னியப்பர் முகத்தில் கடுமை ரேகை விரித்தது.

தலைமையாசிரியர், மேசை விரிப்பு, பன்னீர்செம்பு, சந்தனக் கிண்ணம் ஆகியவற்றைப் பள்ளிப் பணியாளன் பழனியிடம் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

''சார்! நேத்து பரீட்சையிலே எச். எம். பையனே காப்பியடிச்சான். நான் கையும் களவுமாப் பிடிக்கக் கொடுத்திட்டேன். இதிலே என்ன சார் தப்பு? இதுக்குப்போய் ஒரு மெமோவா?''

''ஏய்யா இன்னைக்கு எச். எம். பையன் மேலே தப்புச் சொல்ற நீ நாளைக்கு எந்தப் பையன் மேலேதான் தப்புச் சொல்லமாட்டே? எச். எம். பையனைக் காப்பியடிச்சான்னு புடிச்சா அது அவருக்கு அவமானமா இருக்காதா? அவரு எப்பேர்ப்பட்ட மனுஷன்! கவர்ன்மெண்ட் அவார்டு வாங்கினவரு... மேலதிகாரியை அவமானப்படுத்தின... அது குத்தமில்லையா?'' சென்னியப்பர் பொரிந்து தள்ளினார். அவருக்கு மூக்கு விடைத்துக் கண் சிவந்துபோயிற்று.

''சார்! பையன்களைக்காப்பியடிக்கவிட்டா அது பள்ளிக்கூடத்துக்கே கெட்ட பேரைத் தானே உண்டாக்கும்?''

''ஆமா... மகாக் கெட்ட பேரை உண்டாக்கும்... உனக்குக் கொஞ்சமாவது அறிவிருக்கா... எல்லாப் பையன்களையும் காப்பியடிக்க விடறதுக்கு எச். எம். என்ன மடையரு? ரொம்பப் பேசறே நீ!''

''சார்! எச். எம். பையனே தப்பா நடந்துக் கிட்டா, மத்த பசங்க தப்பா நடக்கிறதுக்குஅது வழிகாட்டாதா?''



''மத்த பையன்களை தப்புப் பண்ணுறமே பாத்துக்கணும். அதுக்குத் தான் நல்ல கெட்டிக்கார வாத்தியார் வேணுங்கிறது!''

''சார்'' என்று இராமநாதன் மறுபடியும் ஏதோ சொல்ல வாயைத் திறந்ததும், ''போதும் நிறுத்தய்யா... நீ மேக்கொண்டு ஒன்றும் வியாக்கியானம் பண்ண வேண்டாம் என்று சென்னியப்பர் தம் பார்வையைத் திருப்பிய திசையில் திருவாசகம் பிள்ளை, நிர்வாகி வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டிய ஆப்பிள்களையும், மாலைகளையும், பழனியிடம் ஒப்படைத்து 'டேய்! பத்ரம் ஐயா வீட்டுலே கவனமாகக் கொண்டு போய்க் கொடு!' என்றதோடு அப்படியே 'இதையுங்கொஞ்சம் நல்லாக் கேட்டுக்க' என்று அவன் காதில் ஏதோ முணுமுணுத்தார். பணியாளன் பழனியின் தலை இசைவாக அசைந்தது.

அன்று இரவு மணி 7.30 இருக்கும். இராமநாதன் தலைமையாசிரியர் வீட்டுக் கதவருகே ஒரு புயலடித்தார். ஆத்திரமும் அவமானமும் அடங்கவில்லை அவருக்கு. கதவு தானுகத் திறந்து கொண்டது. திருவாசகம்பிள்ளை விருது பெற்றதற்காக விருந்து நடந்து கொண்டிருந்தது.

''ஏலே! அருக்காணி கடையிலே கோழிப் பிரியாணி வாங்கிட்டு வான்னு... ஆட்டுக் கறி வறுவலே வாங்கிட்டு வந்திருக்கிறே. அறிவிருக்கா உனக்கு....?

''அது தீந்து போச்சுங்க சார்'' என்றான் பழனி.

### ''கூட்டுச் சேர்ந்த பீர்!''

கூட்டுச் சேரா நாடுகள் மாநாட்டின் நான்காவது நாள் அன்று நேஷனல், மற்றும் இண்டர்நேஷனல் பிரஸ்ஸுக்காக ஐ. டி. டி. ஸி. இலவசமாக பீர் வழங்க முடிவு செய்தது. அதன் படி ஒரு அறிவிப்புப் பலகையும் வைத்தது.

பீர் சாப்பிட்ட மறு நிமிடமே நெரிசலான க்யூ ஒன்று ஏற்பட்டு விட்டது.

வழக்கமாக 400 பாட்டில்கள் மட்டும் செலவாகும் இடத்தில் 2400 பாட்டில்கள் செலவானதோடன்றி 500 பீர் குடிக்கும் கண்ணாடி டம்ளர்களும் காணுமல் போய்விட்டதாம்.

—'ஜீ' — சன் பத்திரிகையிலிருந்து



கதவோரம் நின்றுகொண்டிருந்த இராமநாதன் அவர்கள் கண்ணில் படவில்லை. 'நம்ம வாத்தியாருக்கேத்த ப்யூன் — வடிகட்ன மடையண்டா'' என்று கெக்கலித்த பழைய மாணவர் இராமசாமியும் அதை எதிரொலித்த வீவிங் மில் முதலாளி வீராசாமியும் கூட — அவரைக் கண்டு கொள்ளவில்லை.

சார்! சார்! என்று தம் குரலில் இராமநாதன் கனத்தை ஏற்றினர்.

''இதோ பாருங்க — எம். எல். ஏ., நீங்க நம்ம எட்மாஸ்டருக்கு இந்த விருது வாங்கித் தரரொம்பச் சிரமப்பட்டிருக்கிறீங்க...சாயந்திரம் வெழாவுக்கும் வரலே... இப்ப நீங்க எல்லாத்துக்குமாச் சேத்து இன்னொரு கிளாஸ் ஸ்பெசலா ஏத்திக்கத்தான்வேணும்'' என்று பாட்டில் கார்க்கைத் தம் பற்களால் கவ்வி இழுத்த சென்னியப்பருக்குத் தான் கதவருகே இராமநாதன் நிற்பது தெரிந்தது.

''யாரையா அது?''

''நான்தான் சார். இராமநாதன். ஸ்கூல் பி. இ. டி.''

''என்ன விஷயம்...? இந்த நேரத்திலே இங்கே ஏய்யா வந்தே?''

''என்னோட இராஜினுமாக் கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போகலாம்னு நான் வந்தேன்.''

''யோவ்! வாத்யாரே... இவன் கொடுக்கிற கடுதாசியை வாங்கிக்கோய்யா''—என்று சென்னியப்பர் உத்தரவு போட்டார். ''டே! பழனி... எங்கையிலே 'கட்டு' இருக்குது... நீ வாங்கி வைய்டா அதே!'' என்று திருவாசகம்பிள்ளை — பணியாளனுக்கு உத்தரவை — மாற்றினர்.

''வாத்யாரே! இந்த மாதிரி அயோக்கியப் பசங்களை வாத்தியார் வேலைக்கு வைச்சுக்கிட்டா — படிக்கிற பசங்க கெட்டுத்தாம் போவானுக. நாளைக்கே இவனை ரிலீவ் செஞ்சிரு...'' என்று நிர்வாகி வார்த்தைகளை நனைந்து நனைத்துக் கனைப்படுத்தி அனுப்பினுர்.

கதவு படாரென்று அடித்தது — இராமநாதன் வெளியேறிவிட்டார்.

திருவாசகம்பிள்ளை சீட்டுகளை விநியோகம் செய்யத் தொடங்கினர்.

''எம். எல். ஏ. சார் எனக்கொரு யோசனை தோணுது.''

''உனக்கா — சொல்லுய்யா....''

''நம்ம நிர்வாகி சென்னியப்பருக்கு நாம் ஒரு பட்டம் தந்து பாராட்டோணுங்க'' சீட்டுக்களை வரிசைப்படுத்திக் கொண்டே ''என்ன பட்டம்யா கொடுக்கிறது. அதெயும் நீயே சொல்லறது'' என்றார் எம். எல். ஏ. 'கல்வித் தந்தை' என்று கொடுத்தா எப்படியிருக்குங்க.... அப்போ ''கல்வித் தாய் யாருய்யா?'' என்று பழைய மாணவர் இராமசாமி இண்டரஸ்டிங்காக ஒரு கேள்வி கேட்க 'வேறே யாரு? பாட்டு வாத்தியாரம்மா ஜானகிதான்'' என்று வீராசாமி — ஒரு வெடிச் சிரிப்புக்கு விதை தூவினர்.

# வெப்பத்தால்
# நீங்கள் வலுவிழந்து
# வாடுகையில்...



உங்களுக்கு
நம்பகமான
க்ளாக்ஸோஸ–Dயின்
புதிய பெயர்.

உட்கொள்ளுங்கள் **க்ளுகோன்-டி** ®

**அதிக சக்தி—உங்களுக்குத்தேவையான போது.**

வெப்பத்தைப் போல் உங்களை வலுவிழக்க செய்வது பிறிதொன்றில்லை. கோடையின் வெப்பத்திலே வடிந்து விடும் உங்கள் சக்தி யெல்லாம். அப்போது தான் உங்களுக்குத் தேவை புத்துணர்ச்சி தரும் குளுமையான க்ளுகோன்-டி. அது உங்களுக்கு அதிக சக்தி தருகிறது-உங்களுக்குத் தேவையான போது.

30 ஆண்டுகட்கும் மேலாக இலட்சக் கணக்கானோர்க்கு நம்பகமான க்ளாக்ஸோஸ்-டி யின் புதிய பெயர் தான் க்ளுகோன்-டி. எந்த பானத்திலும் அதைக் கலந்து அருந்தலாம்; பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ, நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

உங்கள் குடும்பத்தினர் அனைவர்க்கும் கொடுங்கள் க்ளுகோன்-டி; மேற்கொண்டு தத்தம்பணிகளில் அவர்கள் ஈடுபட—விளையாட்டிலும், வேலையிலும். க்ளுகோன்-டி—உங்களுக்கு வழக்கமான அதே பச்சை உறையிலே கிடைக்கிறது.








வைட்டமின்-டி மற்றும் கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் கொண்டு
வளமூட்டிய அசல் க்ளுகோஸ் பவுடர்—**க்ளாக்ஸோ** அளிக்கிறது.

HTB-GJL-6591 TL

# கொஞ்சம் குளிர் கொஞ்சம் பசி

வையவன்

ஒரு கை சதீஷிடமிருந்து அந்தப் பொட்டலத்தைப் பிடுங்கிற்று. இன்னொரு கைக்கு அது மாறிற்று. வரிசையாக என். ஸி. ஸி. உடையில் நின்றுகொண்டிருந்த சிறுவர் கூட்டத்தில் ஒரு கையிலிருந்து இன்னொரு கை என்று 'த்ரோ பால்' மாதிரி அவனது டிபன் பொட்டலம் பயணம் செய்தது.

சதீஷ் முகம் சிவந்து விட்டது. அவர்கள் அதைச் சும்மா வேடிக்கைக்காகச் செய்ய வில்லை. அதை ஜக்கு அவன் கையிலிருந்த டிபன் பொட்டலத்தைப் பிடுங்கும்போதே உணர்ந்து விட்டான். ஒவ்வொரு என். ஸி. ஸி. பரேட் முடிந்ததும் வழங்கப்படும் டிபன் பொட்டலத்தை சதீஷ் மட்டும் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போவதில் அவர்கள் எல்லோருக்கும் ஒரு கரிப்பு.

முக்கியமாக ஜக்குவுக்கு.

கை கையாய் மாறிக் கொண்டிருந்த டிபன் பொட்டலத்தின் கட்டு நூல் எப்போது பிய்ந்து விடுமோ என்று அவன் மனம் துணுக்குற்றது.

அவர்கள் எல்லோரும் ஒரே கட்சி. ஒருவன் சிக்கிக் கொண்டால் அவனை வதைத்து அந்த இம்சையில் ஆனந்தம் காண்பவர்கள். அவர்களுக்கு எப்போதும் ஒரு பலியாடு வேண்டும். இன்று வகையாக அவன் சிக்கிக் கொண்டான்.

''டேய் அழுவறான்.. குடுத்துடுவோமா''

ஜக்குவின் நண்பன் சிங்காரம் சொன்னான்.

''மோகத்தைப் பார்த்தா அப்படித் தெரியலியே! விறைப்பாத்தான் இருக்கான்.''

''என். ஸி. ஸி. மாஸ்டர்கிட்டே ரிப்போர்ட் பண்ணிடப் போறான்டா.''

''ஏன்டா பண்ணுவியா?''

அவன் பதில் சொல்லவில்லை.

நிரல் உறங்கும் அந்த மைதானத்தில் சதீஷ் அம்மாவையும் அண்மையில் வயசுக்கு வந்திருந்த அக்காவையும் நினைத்துக்கொண்டு நின்றான். வயிறு கரைந்து மெல்லக் கூப்பாடு போட்டது. பசி. அம்மா காத்திருப்பாள். என். ஸி. ஸி. டிபன் பொட்டலம் வருமென்று அக்கா கூடக் காத்திருப்பாள். சுற்றி நிற்பவர்கள் யாருக்கும் பசிக்காது. பரேட் ஆரம்பிக்கு முன்பே அவர்கள் கான்டீனில் நுழைந்து வந்தனர்.

சதீஷுக்கு நெஞ்சு வரை துக்கம் வந்து முட்டிற்று. அவர்கள் டிபன் பொட்டலத்தைப் பிடுங்கி வெறுப்பு ஏற்படுத்துவதற்காகவல்ல. அக்கா காத்திருப்பதற்காக.

''டேய்... குடுத்துடலான்டா...''

சதீஷ் மார்பின் மீது கையைக் கட்டினான். நிமிர்ந்து நின்றான். 'உங்களால் வேறு என்னடா செய்துவிட முடியும்?' அவன் கண்கள் அந்தக் கேள்வியைக் கேட்டன.

தூரத்தில் ஒருவன் கையிலிருந்து இன்னொரு கைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த பொட்டலத்தின் நூல் பட்டென்று அறுந்தது. மற்றவன் பிடிக்க முயலும்போதே மடித்திருந்த காகிதம் விடுதலையாகி, பொட்டலத்திலிருந்த இட்லிகளும் வடையும் நழுவி மைதானத்து மண் தரையில் விழுந்தன.



மனசுக்குள் ஒரு மண் குடம் விழுந்து நொறுங்கியமாதிரி ஒரு சிதைவு. எல்லாரும் திரும்பி சதீஷையே பார்த்தனர். அவனுக்குக் கன்னம் துடித்தது.

எவன் கையிலிருந்து பொட்டலம் சிதறி விழுந்ததோ அவன் சதீஷை நோக்கி மெதுவாக நடந்து வந்தான்.

''ஸாரிடா சதீஷ்!''

பொட்டலத்தைப் பிடிக்கத் தவறியவன் சொன்னான். சதீஷுக்கு உதடு துடித்தது. ஆயினும் அவன் மௌனமாயிருந்தான்.

ஏழெட்டுப் பேர் நின்ற அந்தச் சின்ன வட்டத்தில் ஓர் அசம்பாவிதத்தின் நிசப்தம் நிலவிற்று.

''இட்ஸ் ஆல் ரைட்னு சொல்லேண்டா.''

சூயிங்கத்தை மென்று கொண்டே ஜக்கு தான் அலட்சியமாக யோசனை சொன்னான். அல்ப விஷயம் என்ற பாவம் அவன் கண்ணில் மிதந்தது.

சதீஷ் அவனை ஒரு முறை பார்த்தான். அடுத்து அந்தப் பொட்டலத்தை விட்டெறிந்தவனை, அதைப் பிடிக்கத் தவறியவனை, கீழே மண்ணில் புரண்டிருந்த இட்லி வடைகளைக் கவ்வ நாலுகால் பாய்ச்சலில் ஓடி வந்து கொண்டிருந்த நாயை மாறி மாறிப் பார்த்தான். அவனுள் எதுவோ குமுறிற்று. வெடிப்பதற்கு முந்தின குமுறல்.

''ஏய்...வாயைத் திறந்து சொல்லேண்டா... அந்த ரமேஷ் எவ்வளவு ஃபீல் பண்றான் பாரு.....''

ஜக்கு அடிக்கிற மாதிரி சொன்னான்.

''என்ன சொல்லணும்கிறே?'' பற்களைக் கடித்துக் கொண்டு நிதானமாகக் கேட்டான்.

''இட்ஸ் ஆல்ரைட்னு சொல்லு.''

''இட்ஸ் ஆல் ரைட்.''

''இப்படிப் பாடம் ஒப்பிக்கிற மாதிரி இல்லே. நெஜம்மா ஃபீல் பண்ற மாதிரி சொல்லு.''

''டே ஜக்கு அவனை விட்டுடுடா.''

''நோ... நோ... எங்க வீட்ல வேலை செய்யறவ மகனுக்கு இவ்வளவு திமிர் இருக்கப் படாது. வி. ஷுட் மச் ஹிம் சென்ஸ்.''

சதீஷ் அவனை நோக்கி ஓரடி முன்னால் வைத்தான்.

''பீ கேர்ஃபுல் ஜக்கு.'' சதீஷ் முகத்தில் ஒரு வெறி மின்னியது.

பொட்டலத்தை வீசியெறிந்த ரமேஷ் குறுக்கிட்டான்.

''நீ சும்மா இரு ஜக்கு. ஐ'ம் ஸாரி சதீஷ். இந்தா...'' என்று கூறிவிட்டு அந்த ரமேஷ் தன் ட்ரௌசர் பாக்கெட்டில் கையை விட்டு பர்ஸை எடுத்தான். ஓர் இரண்டு ரூபாய் நோட்டை உருவி சதீஷிடம் நீட்டினான்.

சதீஷ் அந்த நோட்டையும் அவனையும் மாறி மாறிப் பார்த்தான்.

''எனக்கு வாண்டாம்.''

''டேய், இந்தத் திமிர் பிடிச்சவன் கிட்ட ஏண்டா உன் 'ஜெனராஸிடியைக் காமிக்கக் கறே. ஏதாவது மீந்தது சேர்ந்தது கெடைக்குமான்னு அலையற பசங்க....'' என்று ஜக்கு

தொடர்வதற்குள் நறுக்கென்று சதீஷ் குறுக்கிட்டான்.

''செகண்ட் வார்னிங் ஐக்கு. மூணாவது வார்னிங் இருக்காது. பி கேர்ஃபுல்.''

''என்னடா பெரிய லார்ட் மாதிரிப் பேசறே... யூ பெக்கர்.''

ஒரே அறையில் அவனை அறைந்து கொன்று விடுகின்ற வெறியோடு வலது தோளைச் சாய்த்துக் கை மாறிய சதீஷ் அவன் கன்னம் வரை கையைக் கொண்டு வந்தவன் சட்டென்று நிறுத்திக் கொண்டான்.

''தைரியமிருந்தால் என்னை அடிடா!'' என்று சற்றுப் பயத்தோடு அப்படி அவன் செய்ய மாட்டான் என்ற துணிச்சலோடு ஒரு கோழை சவால் விட்டான் ஐக்கு.

அவனை ஒரு முறை வெறுப்போடு பார்த்து விட்டு முகத்தைத் திருப்பி அடிவயிற்றிலிருந்து வந்த பசியின் கசப்பைப் புரட்டிய வாறு காரித் துப்பினான்.

மைதான ஓரத்தில் பள்ளிக்கூடச் சாலையிலிருந்து ஒரு சைக்கிளின் மணியோசை கிணு கிணுவென்று அவர்களை அழைப்பது போல் கேட்டது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

என். ஸி. ஸி. கமாண்டர் நின்றுகொண்டிருந்தார்.

சதீஷை நோக்கி அவர் கையை ஆட்டினார்.

அவன் மட்டும் அவரை நோக்கி நடந்தான்.

''வாட்ஸ் ராங்?''

சதீஷ் மௌனமாய் இருந்தான்.

''கமான் சொல்லு. என்ன நடந்தது?''

''அவங்க என் டிபன் பொட்டலத்தைத் தூக்கிப் போட்டு விளையாடித் தரையிலே கொட்டி வேஸ்ட் பண்ணிட்டாங்க.''

''ஐ ஸீ'' அவர் அவனைத் துருவி ஆராய்கிற மாதிரி பார்த்தார்.

''நான் எல்லாத்தையும் பார்த்துக்கிட்டே தான் வந்தேன்.... பட்... நீ ஏன் அவனை அடிக்க மாறின கையை அப்படியே நிறுத்திக்கிட்டே?''

''.......''

சதீஷின் கண்களில் கண்ணீர் கொப்பளித்து வந்தது.

பக்கத்தில் நின்ற கம்பெனி காப்டன் ராமதுரையைப் பார்த்து ''டிபன் பொட்டலம் இன்னும் மீதி இருக்கா?'' என்றார்.

''ஞாபக மறதிக்கு மாத்திரை சாப்பிட்டேனா, இல்லையா — என்பதை என் மனைவியிடம் கேட்டுத்தான் தெரிஞ்சுக்குவேன்.''

''அவங்களும் ஞாபக மறதிக்கு மாத்திரை சாப்பிடறதாச் சொன்னீங்களே''

''ஆமாம்; அவள் எனக்கு முன்னாடியே சாப்பிட்டுருவா!''

—பெ. கலாசாமி



''இருக்கு சார்... இன்னும் நாலைஞ்சு பொட்டலம் இருக்கும்... பியூனுங்க வாட்ச்மேனுக்காக வச்சிருக்கோம்.''

''போய் ஒண்ணைக் கொண்டா.''

''வாண்டாம் சார்.'' உதடு துடிக்கப் பதிலளித்தான் சதீஷ்.

நகரப்போன ராமதுரை நின்றான்.

''இட்ஸ் ஆல்ரைட் மேன்... நீ போ கேப்டன்.''

''சார்.... ப்ளீஸ்... ப்ளீஸ்... எனக்கு வேணும்.''

அவர் கமாண்டர் என்பதை ஒரு கணம் மறந்த மாதிரி புறக்கணிக்கிற மாதிரி சதீஷ் குரலை உயர்த்தி ஏறக் குறையக் கத்தி விட்டான். ராமதுரை சட்டென்று நின்றான். கமாண்டர் திகைத்து விட்டார். ஒரு முறை அவனை உற்றுப் பார்த்தார்.

''ஐ அண்டர்ஸ்டாண்ட் யூ. இந்தச் சுயமரியாதையை என்னால புரிஞ்சுக்க முடியுது. ஆல் ரைட்... ராமதுரை போய் அந்த ஐக்குவைக் கூட்டிவா....''

ராமதுரை சைக்கிளை நிறுத்திவிட்டு மைதானத்திற்கு நடந்தான்.

''சார் நான் போகலாமா?'' என்று உத்தரவு கேட்டான் சதீஷ்.

''நான் என்கொயர் பண்ணப் போறேன்.''

''நான் வேணும் சார்.''

''ஏன் வேணும்?''

''அந்த ஐக்கு வீட்டிலே என் அம்மா வேலை செய்யறாங்க சார். ஒரு செர்வண்ட் மெய்ட்சன் தன்னோட சக்லாப் படிக்கிறதே அவனுக்குப் புடிக்கலே சார். அது மட்டுமில்லே....'' என்று வேறு எதையோ சொல்ல வந்தவன் உதட்டை மடித்து வாய் மூடிக் கொண்டான்.

''கம் ஆன்... கன்டின்யூ... மேலே ஏதோ சொல்ல வந்தே... நிறுத்திட்டியே...?''

''அவனுக்கு எம்மேலே பொறாமை சார்.''

''ஏன்?''

''நான் என் டிபன் பாக்கெட்டை வீட்டுக்கு எடுத்துப் போய் எல்லோரோடயும் 'ஷேர்' பண்ணிப்பேன். அவங்கம்மா அதைச் சொல்லிக் குத்திக் குத்திக் காட்டுவாங்க... என்னை ரொம்ப ஸ்லாகிச்சுக்குவாங்க. ஜஸ்ட் அவனாலே அதைத் தாங்கிக்க முடியல்லே.''

கமாண்டர் அமைதியாக நின்றார்.

''நேத்திக்குக் கூட என்கிட்டே அவன் முன்னாடிப் புகழ்ந்து பேசினாங்க. கொஞ்சம் குளிரும் கொஞ்சம் பசியும் இருக்கிறவாசிதாண்டா சதீஷ் ஒனக்குப் பாசம்கறது என்னன்னு புரியறதுன்னாங்க....''

சதீஷ் ஒரு பெரிய மனிதனாய் அவர் முன் நிற்பதைக் கமாண்டர் உணர்ந்தார்.

''ப்ளீஸ் நான் இருக்க வேணும் சார்... நீங்களே விசாரியுங்கோ.''

''ஆல்ரைட் நீ போ சதீஷ்.''

சதீஷ் மெதுவாகத் திரும்பிச் செல்வதைக் கவனித்துக் கொண்டே நின்றார் கமாண்டர். ராமதுரை ரமேஷையும் ஐக்குவையும் அழைத்து வந்திருந்தான்.



*வருமான வரி*
*செலுத்துவோருக்கு*
*ஓர் நற்செய்தி!*

**ஒரே கல்லில்**
**மூன்று மாங்காய்கள்**
**வீழ்த்த வேண்டுமா?**

**எப்படி?**

# தேசீய சேமிப்புப் பத்திரம் 6-வது வெளியீட்டில் முதலீடு செய்தால் மூவகைப் பலனைப் பெறலாம்.



6 ஆண்டுகளில் நீங்கள் செய்யும் முதலீடு இரட்டிப்பு ஆகிறது. ரூ 100-00 முதலீடு செய்தால் 6-வது ஆண்டு இறுதியில் ரூ 201-50 ஐப் பெறலாம்.



இப்பத்திரத்தில் முதலீடு செய்யும் தொகைக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்படுகிறது. இந்தச்சலுகை இதற்கு முன்பு கிடையாது. இப்போது புதிதாக வருமான வரி விதிகள் 80 (சி) படி இதில் செய்யும் முதலீட்டையும் சேர்த்துக் கொள்ளலாம்.



இப்பத்திரத்தில் முதலீடு செய்யும் தொகைக்குக் கிடைக்கும் வட்டிக்கு ரூ 7000/- வரை வருமான வரி விதி 80 (எல்) படி விலக்கும் பெறலாம்.

மூவகைப் பலனைத் தருவது ஆறாண்டு தேசீயச் சேமிப்புப் பத்திரம் ஒன்றே. பத்திரங்கள் எல்லா அஞ்சலகங்களிலும் கிடைக்கும். அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள். முந்துங்கள்! முந்துங்கள்! இன்றே முந்துங்கள்!

மேலும் விவரங்களுக்கு
**சிறு சேமிப்பு இயக்குநர்**
143, அண்ணா சாலை
சென்னை 600 002 அல்லது
உங்கள் அருகாமையிலுள்ள
அஞ்சல் அலுவலகம்.



DIPR-509/83-EP

"திரைப் படங்களைப் பார்த்துத்தான் பெண்கள் ஃபாஷனைத் தெரிந்து கொள்ளுகிறார்கள்; கவர்ச்சி உடை அணிகிறார்கள்" என்ற குற்றச்சாட்டு ஒருபுறம்: "கல்லூரி செல்லும் கன்னியரைப் பார்த்துத்தான் நாங்கள் லேட்டஸ்ட் ஃபாஷனையே தெரிந்து கொள்கிறோம்" என்ற திரைப்படத் துறையினர் பதில் மறுபுறம்!

பெண்கள் விஷயம் எப்படியானாலும் ஆண்களின் லேட்டஸ்ட் ஃபாஷனுக்கும் திரைப் படங்களில் டாப் ஹீரோக்கள் அணியும் கவர்ச்சி உடைக்கும் பெரும்பாலும் சம்பந்தமில்லாமல்தான் இருக்கிறது. இங்கு சில காஸ்ட்யூமர்கள் பேசுகிறார்கள்.

**நயீம்:**

உடைகள் டிசைன் செய்ய லண்டன் டிப்ளமா வாங்கியிருக்கிறேன். ஆனால் எனது கற்பனை வளத்தை முழுமையாகப் பயன்படுத்தத் தயாரிப்பாளர்கள் அனுமதிப்பதில்லை. "ஆயிரம் நிலவே வா!" படத்தில் கார்த்திக் இரட்டை வேடமேற்கிறார். அதனால் எனக்கு அதிக வேலை. டைரக்டர் ஏ. எஸ். பிரகாசம் "முதலாளி கார்த்திக்குக்கு உடை ஜிலுஜிலு வென்று இருக்கட்டும்" என்றார். சாதாரண பாண்ட் ஷர்ட்தான். ஆனால் லேட்டஸ்ட் அமெரிக்கன் ஃபாஷனில் ஃபப் காலர். சட்டைக்கு மேல் லெதர் வேஸ்ட் கோட். புது வகை ஷூ. இவற்றுடன் அமிதாப் ஸ்டைலில் காஷ்மீர் ஷாலை இணைத்தேன். ஃபெண்டாஸ்டிக்காக அமைந்துவிட்டது.





**வாணி கமலஹாசன்:**

திருமணத்துக்குப் பிறகு கமலுக்கு மட்டுமே உடைகளை டிசைன் செய்பவளாக மாறினேன்.

கமல், நான், பம்பாயிலுள்ள கச்சின் என்ற தையலகத்தினர் — ஆக முத்தரப்பு மகாநாடு நடத்தி கமலுக்கு உடைகளை நிர்ணயிக்கிறோம். பாலாஜியின் "சட்டம்" படத்தில் ஒரு நடனக் காட்சியில் கமல் தோன்றுகிறார். இதற்காக மார்பில் ஃபிரில் வைத்த முழுக்கைச் சட்டை, போலாக் டை, இடுப்பில் பேண்டுக்கு மேல் பெல்ட்டுக்குப் பதில் பட்டையாக உயர் ரகத் துணி — இந்தக் கோலத்தில் அவர் வந்து நின்றதுமே ரசிகர்கள் இதயத் துடிப்பு அதிகரிக்குமே!

# லேட்டஸ்ட் ஃபாஷன் என்ன?

**ராஜேந்திரன்:**

மோகனுக்குப் பிரத்தியேக உடையலங்கார நிபுணர் நான்தான். பேண்டைவிட அதிகமாக டிஸைனிங் தேவைப்படுவது சட்டைக்குத்தான். எம். ஆர். ராஜாமணி இயக்கும் ''நாலு பேருக்கு நன்றி'' படத்தில் மோகன் கல்லூரி மாணவர். எனவே எம்ப்ராய்டரி ஒர்க் செய்த ஒரு சட்டையைத் தயாரித்தேன். இன்று கல்லூரி மாணவர்கள் சட்டையில் பூக்களையும் எழுத்துக்களையும் எம்ப்ராய்டரி செய்து கொள்கிறார்கள் அல்லவா?





**கண்ணன்:**

நான் இந்தத் தொழிலுக்கு வந்து 20 வருடங்களுக்கு மேலாகிறது. ''உன்னுடைய உடைகளால்தான் நான் ரொம்ப அழகாக இருக்கிறேன்'' என்று பாக்கியராஜ் என்னிடம் 'டார்லிங் டார்லிங் டார்லிங்' படப்பிடிப்பின் போது சிலாகித்தார். உருவாகி வரும் 'அடுத்த வாரிசு' படத்தில் ''டிஸ்கோ பாடல் காட்சிக்கு ரஜனிகாந்துக்கு உடை தைக்க வேண்டும்'' என்று எஸ். பி. முத்துராமன் கூறவும் என் கற்பனை சிறகடித்துப் பறந்தது. ரஜினிக்கு டார்க் கலர்கள்தான் பிடிக்கும். வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட வெல்வெட்டில் முழுக்கை சட்டை உருவாக்கினேன். நடுவிலும் தோள் பட்டைகளிலும் ஸில்வர் பேட்ச் ஒர்க். இடையில் ஸில்வர் கிளாத் பெல்ட். காலில் கம் பூட்ஸ். காலோடு ஒட்டினாற்போல் பேண்ட். கையில் க்ளவ்ஸும் அணிந்து விட்டால் ரஜினி ஸ்டைல் அள்ளிக் கொண்டு போகாதா!

பேட்டி: சலன்

படங்கள்: நேஷனல் செல்லையா, லக்ஷ்மிகாந்தன் பாபா, ஜெயராம்

## 16

ரவிசங்கரின் ஸித்தார் மெல்லிய பின்னணி இசையாய் அறையின் மூலையிலிருந்து ஒலித்தது. ஒபராய் ஷெரிட்டனின் ஒரு பகுதியில் நிற்கையில் அங்கிருந்த திரைச் சீலைகளும், ஆசனங்களும், திண்டுகளும் மொகலாய சாம்ராஜ்யத்தில் நுழைந்தாற்போல் பிரமை ஏற்படுத்திற்று. பாரசீகக் கம்பளங்களின் மேல் ஓசைப்படுத்தாமல் சிவப்பும் பச்சையுமாய் மஸ்லின் டர்பன்களை அணிந்து, ஜரிகை பூவேலை செய்த வெயிஸ்ட் கோட்டில் புன்னகையும் பணிவுமாய் சீஸ் ஸ்டிக்கும், வறுத்த முந்திரிப் பருப்பும் ஏந்தி நகர்ந்த பேரர்களுக்கு ஏமாற்றமளிக்கக் கூடாது என்று நினைத்த மாதிரி விருந்தினர் ஒரு கையில் காக்டெயிலுடன் மறு கையால் அவர்கள் நீட்டுவதைச் சுவைத்தார்கள்.

மெல்லிய திரையாய் அறையில் போர்த்தியிருந்த சிகரெட் புகை மண்டலத்தைக் கார்த்திக் ஒரு சுவாரஸ்யத்துடன் துழாவினான். எல்லாரும் ஜோடியாக வந்திருந்தார்கள். கவனமாக உடை அணிந்து, கவனமாகச் சிநேகிதம் தேடிப் பேசினார்கள். நாசூக்காக ஜோக்கடித்த ஆண்களுக்கு அருகில் தோள் குலுங்க நாகரிகப் பெண்கள் மிகையாகச் சிரித்தார்கள். கூச்சமில்லாத உடையில் அதைப் பற்றிய உணர்வே இல்லாதது போல் வெகு இயல்பாக நின்றார்கள். ஆண்களுக்கு ஜோடியாகக் கையில் விஸ்கி— காஞ்சிபுரம் புடவையில் தோள் போர்த்தி நிற்கும் மிஸஸ் ஸ்ரீநிவாஸன் உள்பட.... இங்கு எந்தவிதமான மனக் கூச்சமும் இல்லை. மாற்றான் மனைவியின் தோள் மேல் கையைப் போட்டுப் பேசுவது மிக ஸௌஜன்யமான யதார்த்தமான விஷயம். எந்த விகல்பமும் இல்லாத விஷயம்.

இவர்களைக் கண்டால் தாராவுக்குப் பிடிக்கவில்லை. என்ன பெண் இவள்! தனியார் துறையில் அவன் நிலையில் இருக்கும் உத்தியோகஸ்தர்களுக்கு இவை யெல்லாம் தவிர்க்க முடியாத நிர்ப்பந்தங்கள் என்று ஏன் புரியவில்லை? இங்கு வந்திருக்கும் பெண்கள் எல்லாம் எத்தனை சந்தோஷமான ஆர்வத்தோடு வந்திருக்கிறார்கள் — அதைத் தங்கள் உடையலங்காரத்திலும், மேலதிகாரிகளிடம் பேசும் நயத்திலும் காண்பிக்கிறார்கள்!

ஆரம்பத்தில் இரண்டு மூன்று பார்ட்டிகளுக்கு வந்துவிட்டுத் தாரா பெரிய கும்பிடு போட்டாள்.—

''என்னால் அந்தப் பைத்தியக்காரக் கும்பலோட சேர முடியாது 'யார்'.''

அவனுக்கு அவளுடைய தீவிரம் புரிந்து கொள்ள முடியாததாக இருந்தது. அதீதமாகப் பட்டது. இரண்டு வாரத்துக்கு ஒரு முறை சேரும் கூட்டத்தில் விளையாட்டாகக் கலந்து கொண்டால் என்ன?

''பணத் திமிரைக் காட்டப் போடும் இந்தக் கூட்டத்திலே நான் நிக்கறதே என்னுடைய கொள்கைக்கு விரோதம், ஸாரி, கார்த்திக். என்னுடைய லைன் வேறே.''

கொள்கை மை ஃபுட்!

கல்யாணமான பிறகும் தனி ஆள் போல் தனிக் கொள்கையும், தனி லைனும் வைத்துக் கொண்டிருந்தால் எப்படி முடியும்? ஆனால் அவன் பேசும் பேச்செல்லாம் இன்னும் அவ



# ஒரு சங்கமத்தைத் தேடி...

னுக்குக் கவர்ச்சியைத் தந்தது. நெஞ்சை அள்ளிற்று. எத்தனை வெள்ளை மனசு இவனுக்கு என்று பெருமிதம் ஏற்பட்டது.

அவள் மட்டும் சற்று அவனுக்கு அனுசரணையாக, அவன் இப்படித் தனியாக மனைவி இருந்தும், இல்லாதவனாக, கையில் ஜின்னுடன் நிற்க வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகாமல் இருப்பாளானால் எத்தனை நன்றாக இருக்கும்! இங்கு வந்திருக்கும் எல்லாப் பெண்களையும் விட அழகும் புத்திசாலித்தனமும் கொண்ட அவள் அவனுடன் இருந்தால் அது எப்படிப்பட்ட பலமாக இருக்கும் அவனுக்கு!

''ஹல்லோ, கார்த்திக்! என்ன உன் வைஃப் வரவில்லையா?''

ஒளியில் குறைந்திருந்த விஸ்கி லோபோவின் சிவந்த கண்களை அதிகச் சிவப்பாக்கியிருந்தது. ப்ரௌன் நிறக் கண்களின் உல்லாசத்தில் பளபளப்புக் கூடியிருந்தது.

''இல்லை!''

''ஏன்?''

''அவனுக்கு வேறுஏதோஎங்கேஜ்மெண்ட்!''



லோபோ அவனைக் கூர்ந்து பார்த்துச் சிரித்து, முதுகில் ஓங்கித் தட்டினார்.

''சும்மா சொல்கிறாய். உனக்குப் பயம். அத்தனை அழகான மனைவியை இங்கே அழைத்து வந்தால் யாராவது கொத்திக் கொண்டு போய் விடுவார்கள் என்று. நாங்களெல்லாம் அத்தனை மோசமில்லை கார்த்திக்!''

அவனுக்கு இலேசாக முகம் சிவந்தது. ''எனக்கு அந்த மாதிரி எண்ணமெல்லாம் கிடையாது. அவளுக்குப்பார்ட்டிகளுக்குவரப் பிடிப்பதில்லை.''

லோபோ புருவங்களை உயரத் தூக்கினார். ''தட்ஸ் ஃபன்னி. அவளுடைய அப்பாவும் அம்மாவும் டில்லியில் பெரிய ஸோஷிய லைட்கள். கிருஷ்ணமூர்த்தியை விட மிஸஸ் கிருஷ்ணமூர்த்தி பிரஸித்தம்!''

கார்த்திக் கூச்சத்துடன் சிரித்தான். ''இவளுக்குஎன்னமோபிடிப்பதில்லை.அவர்கள் ஸோஷியலைட்ஸ் என்றால் இவள் ஸோஷிய லிஸ்ட்!''

லோபோவின் கண்களில் குறும்பு தெரிந்தது.

''என்னால் நம்ப முடியவில்லை'' என்றார் பலமாகத் தலையை அசைத்துக் கொண்டு. ''அவள் அம்மாவை எனக்குத் தெரியும். பெரிய 'கோ கெட்டர்!' உன் மனைவி எங்களுடன் கலந்து கொள்ள விரும்பவில்லை என்றால் அதற்கு நீதான் காரணமாக இருக்க வேண்டும். நீ ரொம்ப ஆசாரக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று எனக்குத் தெரியும். நமது பிறப்பையும் படிந்துபோன எண்ணங்களையும் மறப்பதோ, மாற்றிக் கொள்வதோ ரொம்பக் கஷ்டம். இருந்தாலும் நீ மாறணும் கார்த்திக்! கட்டுப் பெட்டியாக இல்லாமல் அவளை அழைத்துக் கொண்டு வா. அழகும் புத்திசாலித்தனமும் உள்ள மனைவி எத்தனை பெரிய அஸெட் தெரியுமா?''

இதைச் சொன்னது லோபோவாக இல்லாமல், கீழ்நிலையில் உள்ள ஆபீஸராக இருந்தால் சுர்ரென்று தாக்கியிருக்கும். ரோசத்தில் வார்த்தைகள் வெடித்திருக்கும்.

ஒருவன்: ''அந்தத் திருட்டுக் கேஸில், நம்ம மானேஜர் எப்படிடா மாட்டிண்டாரு?''

மற்றவன்: ''எதையுமே தானே செஞ்சதா சொல்றது அவர்வழக்கமாச்சே!''

—ஆர்.எஸ். சுப்பிரமணியன்



ஆனால் இது லோபோ.

அவனுக்குப் பல வருஷங்கள் ஸீனியர். எதிர்கால டி. ஜி. இவரைச் சுற்றித்தான் ஒரு 'ஹாலோ' இருந்தது. எதிர்த்தாற் போல் நின்றவனின் சுரணையை மறக்கடித்தது.

''எனக்கு எந்தவிதக் கட்டுப்பெட்டித்தனமும் கிடையாது'' என்றான் அவன் தீவிரத்துடன். ''அதனாலேயே எனக்கு என் மனைவியின் சுதந்திரத்தில் தலையிட விருப்பமில்லை!''

லோபோ வியப்புடன் அவனைப் பார்த்தார்.

''குட்!'' என்று முதுகைத் தட்டினார். ''இரண்டு பேருக்கு நடுவில் இருக்க வேண்டிய ரொம்ப முக்கியமான பண்பு இது. அது இல்லை என்றால் வாழ்க்கையில் சுவாரஸ்யமே இல்லாமல் போய்விடும். அந்தப் பயத்துக்காகவே நான் கல்யாணம் செய்துகொள்ளவில்லை!''

ட்ரிங்ஸுடன் சென்று கொண்டிருந்த பேர்ரரை லோபோ உற்சாகமாகக் கூப்பிட்டார். கார்த்திக்கின் கையிலிருந்த பைனாப்பிள் ஜூஸை உரிமையுடன் பிடுங்கி டிரேயில் வைத்தார்.

''எனக்கு அவமானம். நீ வெறும் ஜூஸ் குடிப்பது. இதை டேஸ்ட் பண்ணிப் பார்—ரியல் ஸ்காட்ச்!''

''வேண்டாம். எனக்குப் பிடிக்காது. பழக்கமும் இல்லை.''

''ஓ கமான், அதெல்லாம் ஒருவகைப் பேடித்தனம். இதைத் தொட்டதினால் உன்னுடைய பவித்திரம் போய்விடாது. நீ நுழைஞ்சிருக்கிற உலகத்தோடு அனுசரித்துப் போகவில்லையானால் இங்கே நீ தனியாகத்தான் நிக்கணும்...''

அவன் குழப்பத்துடன் வாங்கிக்கொண்டான்.

''தட்ஸ் பெட்டர். நீ வித்தியாசமாக நடந்து கொண்டால் உன்னிடம் நெருங்கி வரமுடியாமல் ஒரு சுவர் இருக்கும்.''

அவனுக்குச் சிரிப்பு வந்தது. பைனாப்பிள் ஜூஸ் சுவர் அப்படி யொன்றும் துளைக்க முடியாததில்லை என்கிற நினைப்பும், விஸ்கி கிளாஸைக் கையில் பிடித்திருப்பது இவர் சொல்கிற அளவுக்குமுக்கியத்துவம்வாய்ந்தது என்றால் அதை ஏற்று நிற்பதில் என்ன தவறு என்ற எண்ணமும் தோன்றின.

''அடுத்த மாதம் நான்ஒரு சின்ன ஆடம்பரமில்லாத பார்ட்டி கொடுக்கிறேன் என் வீட்டில். நல்ல கம்பெனிக்காக நல்ல சங்கீதத்துக்காக. நீயும், உன் மனைவியும் கண்டிப்பாக அதற்கு வரவேண்டும். நானே அழைக்கிறேன், பர்ஸனலாக. உஸ்தாத் அம்ஜத் அலி கான் ஸரோத் வாசிப்பார். அவர்என்னுடைய நெருங்கிய நண்பர். அஃபீஷியல் கும்பல் எதுவும் இருக்காது. வருவாளல்லவா?''

அவன் மழுப்பலாகச் சிரித்தான். ''பிஸினஸ் கும்பல்தான் அவளுக்குப் பிடிப்பதில்லை.''

''எனக்குப் புரிகிறது'' என்றார் லோபோ. ''ஆனால் மிஸஸ் கிருஷ்ணமூர்த்தியின் மகளா இவள் என்று நம்ப முடியவில்லை. ஒவ்வொரு

ஆர்ஜென்ட்டா-K

தவழ்ந்துவரும்,

தழுவிநிற்கும்

மென்மை...

ஒளிபடைக்கும் பிலிப்ஸ்






பிலிப்ஸ்

HTB-PEI-8895

ஜனனமும் ஒரு ரியாக்ஷன். நீயும், நானும் நிச்சயம் நம் அப்பாக்கள் மாதிரி இருக்க மாட்டோம். என்ன சொல்கிறாய்?''

''ரொம்பக் கரெக்ட்!''

லோபோவின் வார்த்தைகள் ரொம்ப நேரத்துக்கு மண்டையைக் குடைந்து கொண்டிருந்தன. கல்யாணமாகி ஆறு மாதங்கள் ஆகியும் அவனுக்கும் தாராவின் பெற்றோர்களுக்கு மிடையே அதிக நெருக்கம் ஏற்படவில்லை. கிருஷ்ணமூர்த்தி அநேகமாய் டில்லியில் சேர்ந்தாற்போல் ஒரு வாரம் கூட இருக்க மாட்டார். வெளி நாடுகளுக்குப் பறந்து கொண்டிருப்பார். அவன் அவர் மகளை மணந்த பிறகும் 'என்னுடைய லெவல் வேறு' என்கிற தினுசில் விட்டேற்றியாக இருந்தது அவனது சுபாவக் கூச்சத்தையும், தன்மானத்தையும் பாதித்தது. கிட்ட நெருங்க முடியாமல் தடுத்தது. மிஸஸ் கிருஷ்ணமூர்த்திக்கும், தாராவுக்கும் இடையே அதிக நெருக்கம் இல்லை என்று அவன் புரிந்து கொண்டான். அவளுக்குப் பல்வேறு துறைகளில் வேலை இருந்தது. தனிப்பட்ட முறையில் வெளி நாடுகளுக்கும், பார்ட்டிக்கும் மீட்டிங்குகளுக்கும் செல்கிற அந்தஸ்திருந்தது.

''அவள் ஒரு பெரிய கோ கெட்டர்!'' இதன் தாத்பரியம் என்ன என்று ஆராயப் போவது அநாகரிகம் என்று அவன் நினைத்துக் கொண்டான்.

தாராவின் வீட்டில் எல்லோரும் தனித் தனி நபர்கள் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். தங்கள் சுதந்திரத்தையும் மற்றவர் சுதந்திரத்தையும் போற்றுபவர்கள். அது எத்தனை விவேகமான ஏற்பாடு என்று தோன்றிற்று. பத்தாம் பசலிக் கட்டுப் பெட்டித்தனத்திலிருந்து பகிரங்கமாகவெளிப் பட்டு வெற்றிப் பாதையில் நடப்பவர்கள்... டில்லி உயர் மட்டத்து வட்டத்தில் மிக முக்கியமான அங்கம் வகிப்பவர்கள் — அது எப்படிப்பட்ட சாதனை!

காக்டெய்ல் முடிந்து, ஸூப் வந்து டின்னர் தொடங்குவதற்குள் ஏக நாழிகை ஆகிவிட்டது. அவன் வீடு போய்ச் சேர்ந்தபோது, தாரா இன்னும் தூங்காமல், ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்திருந்தாள். அவனைப் பார்த்து சகஜமாகப் புன்னகைத்து,

''எப்படி இருந்தது உன் பார்ட்டி?'' என்றாள்.

''நீ இல்லாமல் போர் அடிச்சுது!''

அவள் சின்னப் பெண்ணைப் போல் அவனைப் பார்த்து அழகு காட்டினாள்.

''பின்னே ஏன் போனே?''

அவன் உடையை மாற்றிக் கொண்டு படுத்தான். அவளருகில் ஒண்டிக்கொண்டு செல்லமாகச் சிணுங்கினான்.

''ப்ளீஸ் தாரா, மறுபடியும் ஆரம்பிக்காதே. ஏற்கவே தலையைச் சுத்தறது.''

அவள் பரிவுடன் அவன் தலையைக் கோதினாள்.

''நடக்கத் தெரியறதுக்கு முன்னாடிப் பறக்கப் பார்த்தியானா அப்படித்தான் சுத்தும்.''

இந்த மாதிரி ஒரு நைட் கவுனில் நூற்றுக் கிழவி மாதிரி அவள் பேசுவது அவனுக்குச் சிரிப்பைத் தந்தது.

''என் திறமையிலே உனக்கு நம்பிக்கையே கிடையாது. அதுதான் கஷ்டம். அங்கே எல்லார் பெண்டாட்டியும் தங்க புருஷன்களை ஹீரோன்னு நினைச்சுண்டு அவன்கள் இழுத்த இழுப்புக்கு நாய்க் குட்டிகளாட்டம் பார்ட்டிக்கு வரா.''

''அந்தக் காரணத்துக்காக நிச்சயம் வரல்லே. அந்தப் பெண்களுக்கு வேறே வேலை



''என்ன இது! இந்த ஓட்டலைப் பார்த்தால் இடிந்து விழுந்துவிடும் போல் தோன்றுகிறது. இதை நட்சத்திர ஓட்டல் என்றாயே?''

ஆமாம்... உண்மைதான்... இந்த ஓட்டல் அறையில் படுத்தால் வானத்தில் உள்ள நட்சத்திரங்கள் தெரியும்... அதனால்தான் அப்படிச் சொன்னேன்.''

– ஏ.

இருக்காது. வடிகால்களைத் தேடி அலையறா. மத்த ஆண்களோட பாராட்டைக் கேக்கறதிலே ஒரு திருப்தி அவர்களுக்கு. ஓவராட்ரஸ் பண்ணிண்டு வரதுக்கு எல்லாம் அது தான் காரணம். ஐ காண்ட் ஸ்டாண்ட் ஸச் விமன். அது ஒருவகை வேசித்தனம்!''

அவளது தீவிரமான பேச்சு அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. அவனுடைய அம்மாவைப் பற்றி லோபோ சொன்னது திடீரென்று ஞாபகம் வந்தது.

''ரொம்ப மாடர்ன் பொண்ணுன நீ, எல்லாரையும் போல பார்ட்டிக்கு வராதது லோபோவுக்கு ரொம்பப் ஆச்சரியம்.''

''என்ன ஆச்சரியம்?''

''உங்கம்மா மாதிரி நீ இல்லேங்கறதிலே ஆச்சரியம்!''

கோதிக் கொண்டிருந்த அவளது விரல்கள் சட்டென்று இறுகின. மெல்ல அவற்றை விடுவித்துப் போர்வையைக் கழுத்து வரை

இழுத்து மூடிப் படுத்தாள். கண்களை மூடியபடி மெல்லிய குரலில் சொன்னாள்.

"உங்கப்பா மாதிரி நீ இல்லேங்கறது ஆச்சரியமா இல்லையாமா?"

அவனுள் இந்த ஞாபகப்படுத்தல் காரணம் இல்லாமல் நமைச்சல் ஏற்படுத்திற்று.

"யாரும் யாரை மாதிரியும் இருக்க முடியாது தாரா!"

"தட் இஸ் இட். இருக்க வேண்டிய அவசியமும் இல்லே."

அவன் சிறிது நேரம் எதுவும் பேசத் தோன்றாமல் படுத்திருந்தான். கல்யாணத்துக்கு முன் பட்டாம் பூச்சி போல் இவளது துருதுருவென்ற ஓட்டமும், பளீரென்ற சிரிப்பும், அவனைத் தூக்கிக்கொண்டு காதலித்த வசீகரமும் அவனை எப்படி வளைத்துப் போட்டன! இவளது சுதந்திரப் போக்கும் மரபை எதிர்த்த எண்ணங்களும் எத்தனை ஆகர்ஷித்தன! தானும் மரபை எதிர்ப்பவன் என்ற காரணத்தினால், வளர்ந்த சூழலிலிருந்து விடுபடத் துடித்த வேட்கையினால் ஏற்பட்டிருக்க வேண்டும் இந்த ஈர்ப்பு. இருவருடைய எதிர்ப்புக்கும் இருக்கும் வித்தியாசம் இப்பொழுதுதான் புரிந்தது. புரிந்ததும் மனசில் தெளிவேற்படாமல் குழம்பிற்று. மெத்தென்று அவளுடைய கை அவனை அணைத்தது. அவளுக்கென்று ஒரு தனிப்பட்ட மென்மையான வாசனை இருந்தது. பட்டுப் போன்ற அவளது ஸ்பர்சத்தில் சட்டென்று அவன் குழப்பங்களிலிருந்து விடுபட்டவனாய்த் திரும்பிப் படுத்து அவளை அணைத்துக் கொண்டான்.

"உம், என்ன வாசனை உன் உடம்புக்கு?" என்றான் கொஞ்சலாக. "எத்தனை நன்னாயிருக்கு!"

அவள் குறும்புடன் மூக்கைச் சுளித்தாள். "ஆனா இன்னிக்கு உங்கிட்டேந்து வர வாசனை நன்னாயில்லே!"

அவன் கூச்சத்துடன் சிரித்தான். "என்ன செய்யறது தாரா? ஒரு வட்டத்துக்குள்ளே நுழையும்போது சில நிர்ப்பந்தங்களுக்கு நம்மை உட்படுத்திக்க வேண்டியிருக்கு!"

அவள் அவன் காதைச் செல்லமாகத் திருகினாள்.

"வட்டத்துக்குள் இருந்துண்டே உன் சுதந்திரத்தை இழக்காமல் இருக்கக் கத்துக்கணும் முட்டாளே!"

அவள் வித்தியாசமாக இருந்தால் என்ன ஆகும் என்று லோபோவின் உபதேசத்தை இவளிடம் சொல்லத் தயக்கமாக இருந்தது.

"இப்பத்தானே நுழைஞ்சிருக்கேன். சிறிது நாள் ஆகும் என்னை நிலைப்படுத்திக்க!"

"கொஞ்ச நாள்லே என்ன ஆகும் தெரியுமா? அந்த வட்டத்துக்குள்ளே நன்னா ஊறிப்போயிடுவே. விளைவுதான் முக்கியமாப் படும்போது மூலத்தைப் பத்தி என்ன கவலை இருக்கும்? வேஷமும் பொய்ப் பித்தலாட்டமும் ரொம்பச் சுலபமாய்ப் பழகிப் போயிடும். 'இல்லாதவனைப் பத்தின கவலையே தோணாத இருப்பவனுடைய ராங்கித்தனம், ஜடத்தனம், சௌகரியமான சொக்காய் மாதிரி உன் மேலே உக்காந்துக்கும். இந்த மாறுதல்களுக்கு நீ பாவம் பொறுப்பில்லே. ஏன்னா அந்த வட்டத்துக்குள்ளே நுழைஞ்சப்புறம் சில விளைவுகளுக்கு உள்ளாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்."

அர்த்த ராத்திரியில் ஏதோ பாடம் சொல்கிற மாதிரி அவள் பொரிந்து தள்ளுவது அவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

இன்னும் நெருக்கமாக அணைத்துக்கொண்டு அவன் முணுமுணுத்தான்.

"ரொம்ப இடதுசாரியா இருக்கே தாரா"

"இடதும் இல்லே, வலதும் இல்லே. நேரப் பார்க்கிற குணமே மனுஷனுக்கு மறந்து போனதுனாலதான் இடதுசாரி வலதுசாரி என்கிற குழப்பம்....."

"ரொம்ப சரி. நான் இப்போ இடது பக்கம் திரும்பித் தூங்கலாமா?"

அவள் பதிலுக்குச் சிரிக்கவில்லை.

"தூங்கு" என்ற அவளது குரலில் சோர்வு தொனித்தது. (தொடரும்)



ஸ்டாண்டர்ட் ஹைறலோ கூலர் (5 லிட்டர்கள்)

ஸூப்பர் ஹைறலோ கூலர் (5 லிட்டர்கள்)

டிலக்ஸ் ஹைறலோ கூலர் (7 லிட்டர்கள்)

கேம்பர் கூலர் (8 லிட்டர்கள்)



# வேனிற் காலத்தில் குளிர்ந்த பானங்கள் பெற ஈகிள் கூலர் அணிவகுப்பு.




ஈகிள் தெர்மோவேர் கூலர்களின் விசாலமான அணிவகுப்பு. வேனிற் காலத்தில் தாகத்தைத் தணிக்கும் குளிர்ந்த பானங்களைப் பெற இவை வழிகாட்டுகின்றன. இவற்றிலிருந்து வேண்டியதைத் தேர்ந்தெடுப்பீர். உடன் எடுத்துச் செல்லக்கூடிய ஃப்ரிஜ் போன்றவையாகும் ஈகிள் தெர்மோவேர் கூலர்கள்.







CASE-136-203 TAM

# துரோகம்

## கோவி. மணிசேகரன்

அற்புதமான மகாலைக் கொண்ட அந்த அரண்மனையில், பகற்போதின் ஒளிக் காவியம், சூரிய அத்தியாயங்களாக விரிந்து கொண்டிருக்கிறது.

ஆ! அரண்மனையா அது? சொர்க்க விலாசம்! அந்த அரண்மனையில் அரியணை இருக்கும் அறைக்குப் பெயரே சொர்க்க விலாசம்தானே?

அரண்மனை மேன்மாடத்தில் அமர்ந்து காணப்பட்ட நாயக்கமாமன்னர் திருமலை நாயக்கர், அடிக்கடி மூக்கை ஆள்காட்டி விரலால் உரசிக் கொள்கிறார். அதில் பெருந்த சிந்தனை, சிறுத்த விரல் உரசலில் சூடேற்றிக் கொண்டிருக்கிறது...

ஆ! அந்தத் தஞ்சை நாயக்கன் குமாரத்தி அச்சுதம்மா எத்துணைக்கு அகங்காரமான நெருப்புச் சொற்களை நாக்குண்டத்திலிருந்து இறக்கி விட்டாள்!

அமிழ்தனைய தமிழகமே நடுங்கும் திருமலை பூபதி எங்கே? கேவலம் தஞ்சை நாயக்கன் பெற்றெடுத்துத் தாரை வார்த்த இவள் எங்கே? ஓ... அச்சுதம்மா! எவ்வளவு அகங்காரம் உனக்கு? புகுந்த வீட்டுக்கு வந்த பிறகு பிறந்த வீட்டுப் பெருமையா?

'திருமலையின் தொப்பையில் அமர இருநூறு மனைவிமார்கள் தேவையா?' என்கிறாயாம்! 'பட்டத்தரசிகள் இருவருக்கு மட்டுமே செல்வாக்கிருக்க, ஏனைய நூற்றுத் தொண்ணூற்றெட்டு அழகிகளை எதற்காக அந்தப் புரத்தை அலங்கரிக்கச் செய்ய வேண்டும்?' என்று கேள்வி கேட்கிறாயாம்! இன்னும் ஏதேதோ கூறிக் கசப்பான நையாண்டி செய்கிறாயாம்! என்னடி கொழுப்பு உனக்கு?

உன்னைத் தீர்த்துக் கட்டாவிட்டால் இருப்பவர்களுக்கும் கொழுப்பேறி விட்டால்?

இளமையின் செருக்கா? அல்லது அழகின் அகம்பாவமா?

அந்த நேரம் பார்த்துத்தானா நாகம நாயக்கன் அங்கே வரவேண்டும்?

அவனது விதியின் மேல் திருமலை நாயக்கரின் கண்கள் வண்ணம் பூசுகின்றன......

நாகமநாயக்கன், தலைமை அரச பீடமான ஸ்ரீரங்கராயன் மூலம் மதுரைக்கு வந்து துணைத் தளவாயாகப் பணிபுரிகிறவன். மதுரை நகராட்சியின் சில ரகசியங்கள் வேலூர் வரை செல்கிறது என்கிற சந்தேகத்துக்கு இவன் ஆளாகி இருப்பவன். மகாசேனாதிபதியான தளவாய் ராமப்பய்யருக்கு இவன் மீதுதான் படு சந்தேகம். ஆயினும் அவனை ஒன்றும் செய்ய முடியவில்லை. நிரூபணமாகாததை எப்படி நிர்மூலமாக்கி விடமுடியும்?

மேலும் ஒரு ரகசிய சந்தேகம் தமக்கே உரியது.

அரண்மனையில் இருநூறு ராணிகள் இருந்தும் இவனது கண்கள் மட்டும் அடிக்கடி அச்சுதம்மாளிடம் அம்மானை விளையாடி வருவதைச் சாங்கோபாங்கமாக அறிந்திருந்தார். இவன் வேலூரிலிருக்கும் ஸ்ரீரங்கனுக்கு மட்டும் ரகசிய ஒற்றனாக இல்லாமல் தஞ்சைக்கும் இருக்கிறானோ? அவ்வாறு இருக்க இளைய



ராணியான அச்சுதம்மாளின் அழகிய பாகங்களில் சதுரங்கம் விளையாடுகிறானோ?

''மதுரை பூபால, மீண்டும் சேதுநாட்டில் குழப்பமாம். சின்னதுரை செய்தி அறிவித்து வரச் சொன்னார்.''

''ஓகோ!''

மதுரை மாமன்னர் திருமலை நாயக்கரின் சிந்தனை படுதீவிரமாக வேலை செய்கிறது..

சுற்றுமுற்றும் கவனிக்கிறார் நாயக்கமகா தேவர்.

''நாகமா! உன்னால் ஒரு காரியம் நடைபெறவேண்டும். ரகசியமாகச் செய்து முடிப்பாயா?''

''சொல்லுங்கள் பிரபோ! காத்திருக்கிறேன்!''

''பொறுமையாகக் கேள். இன்றிரவு அச்சுதம்மாளைத் தனியாகச் சந்திக்கிறாய். மதுரையைப் பற்றி இழிவாகப் பேசி அவளைச் சோதிக்கிறாய். ஏதேனும் என்னையோ, எனது நாட்டையோ களங்கமாகப் பேசினால் அவளை நீ கைப்பிடிக்கிறாய்! அவள் உனது வலையில் விழுந்து விட்டாள் என்று தெரிகிற அடுத்த கணமே, 'எனது மன்னருக்குத் துரோகம் செய்யவா தஞ்சையில் இருந்து நீ ராணியாக வர வேண்டும்? உனது தஞ்சையின் பலிக இவ்வளவுதானா?' என்று கூறிக் கொலை செய்துவிடு!''

''பூபதி...''

''உஸ்! பேச்சு தேவையில்லை. நான் உத்தரவிடுகிறேன்! நாளைக் காலையில் ஒரு படைப் பிரிவின் தளித்தளவாய் பதவி யேற்றம் பெறுகிறாய்! இந்த ரகசியம் உனக்கும் எனக்கும் மட்டும் இருக்க வேண்டும். சென்று வா!''

மதுரை பூபதி திருமலை நாயக்கரின் கடுமையான உத்தரவை ஏற்று மனம் குமைய நடக்கிறான் நாகமநாயக்கன். அது அவனுக்கு ஒரு வெல்லமிலைய சந்தர்ப்பமேயானாலும் அதுவே பள்ளமிலைய சங்கடமாகி முடிந்து விடக் கூடாதல்லவா?




கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மதுரைமாநகரை 'ஓகோ' வென்று ஆண்டு வந்தவர் மாமன்னர் திருமலை நாயக்கர்.

திருமலை நாயக பூபதிக்கு இருநூறு தேவிமார்கள். அவர்களுள் ஒருத்தி தஞ்சை நாயக்க மன்னன், மகள். தனது மகளைத் தாரை வார்த்துச் சண்டையில்லாமல் செய்து கொண்டார்.

அச்சுதம்மாள் ஆரம்பத்தில் தஞ்சையில் அழுது பார்த்தாள். என்ன செய்வார் தஞ்சை நாயக்க மன்னர்? சுற்றிலும் முகலாய வருகையால் கப்பம் கட்டி முகராக்கள் பொக்கிஷத்தை விட்டுப் பறந்ததுதான் மிச்சம். நாளை ஒன்று என்றால் மதுரை தயவு தேவை. மதுரையே பகைத்துக் கொண்டுமானால்?

மகளைக் கொடுத்து மனக்கவலைக்கு மருந்து தேடிக் கொண்டார் தஞ்சை நாயக்கர்.

திருமலை நாயக்கரால் — தொந்தியும் தொப்பையுமாக இருந்த ஆஜானுபாகுவான திருமலை நாயக்கரால் யாரைத் திருப்திப் படுத்த முடிந்ததோ இல்லையோ, அச்சுதம்மாளை எவ்வழியிலும் நிறைவு செய்ய முடியவில்லை. அவ்விதம் சந்தேகிக்கிற அளவுக்கு 'உதக்' கொட்டி விடுவாள்.

''என் அச்சுதம்மா! உனக்கு என்னைப் பிடிக்கவில்லையா?''

''மதுரையே பிடிக்கவில்லை. மதுரை நாயக்கரையா பிடிக்கப் போகிறது?''

அயர்ந்து போனார் திருமலைநாயக்கர்

''பரவாயில்லை. இந்த அழகிய அரண்மனையிலிருந்து உனக்கு வேண்டிய ஆறுதலைத் தேடிக் கொள்!''

''அரண்மனையா இது? எனது தஞ்சை அரண்மனையின் புழக்கடை இருக்கிறதே.... அதற்கு ஈடு சொல்லாது!''

எவ்வளவு உண்மைக்குப் புறம்பான செருக்கு! பதில்!

இவளைவிட்டு வைப்பதா?

**"ரா**ணி!''

திரும்பிப் பார்க்கிறாள்...

எதிரே நாகமன் மன்மத அலங்காரத்துடன்.

இந்நேரத்தில் இவன் ஏன் இங்கு வர வேண்டும்?

''உள்ளே வரலாமா?''

இமைகள் படபடக்கின்றன. வரலாம் என்கிற சமிக்ஞை...

கதவை மூடுகிறான்: தாழிடுகிறான்...

''ஏன் கதவை மூட வேண்டும்?''

''வேறு கதவைத் திறக்க!''

''புரியவில்லை.''

''மனக்கதவை!''

''அதற்கு இதுவா நேரம்?''

''இன்பத்துக்கு மட்டும் இரவை ஆண்டவன் படைக்கவில்லை. இரகசியத்துக்கும் அதுவே தோதுவானது!''

''ஓகோ!''

அவன் தானாகவே அமர்ந்து கொள்கிறான்: நாயகனுக்கு உத்தரவு தேவையில்லையே!

அதனையும் அவள் நோட்டம் விட்டுப் புரிந்து கொள்கிறான்.

''என்ன ரகசியம்?''

''தஞ்சையிலிருந்து உங்கள் தந்தை எனக்கு ரகசியச் செய்தி அனுப்பி இருக்கிறார். மதுரையை அடக்க ஏதேனும் வழியிருப்பின் அவரது மகளை விசாரித்து ரகசிய வழி தேடச் சொல்லியிருக்கிறார். ஒருபுறம் மைசூர் கிழராஜன் கந்திருவ நரசராஜன்; இன்னொருபுறம் மறவர் நாட்டுச் சேதுபதி. இவ்விருவர்களுக்கும் மேலாக இஸ்லாமிய தண்டல்காரர்கள் செஞ்சியில்! எனவே தஞ்சைப் படையை விரிவுபடுத்த மதுரையைக் கைக்கொண்டால் கவலைக்கு இடமில்லை என்பது உங்கள் தந்தையாரின் அபிப்பிராயம். மேலும் நமது தளவாய் ராமப் பய்யர் தஞ்சையை மடியில் போட்டுக் கொள்ள வேண்டும் என்று துடிக்கிறார். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''

''பேஷான அபிப்பிராயம்!''

அவள் புன்முறுவல் பூக்கிறாள்.

அது நாகமனை அசைத்துப் பார்க்கிறது.

''உங்கள் பேரழகுக்கு வர வேண்டிய இடமா இது!''

''தலைவிதி!''

''நினைத்தால் மாற்ற எவ்வளவு நேரம் பிடிக்கும்?''

ஒருகண ஆலோசனை. கண்கள் படபடக்க, பவழச் சிமிழ் திறந்து முத்துக்கள் தரிசனம் தருகின்றன.

''நாகமரே! இந்த நாயக்க மன்னர் உடம்பழகுக்கு — குறிப்பாகத் தொப்பை அழகுக்கு இருநூறு தேவிமார்கள் தேவையா?''

''நீங்கள் தான் சொல்ல வேண்டும்.''

பூனை, எலியைக் கவ்வுவது போலச் சரியான இடத்தைக் கவ்வினான் நாகம நாயக்கன்.

அச்சதம்மாவுக்கு அது புரியாமலில்லை.

''மதுரையை நமது மடியில் போட்டுக் கொள்ள நீங்கள் பரிபூரணமாக எனக்கு உதவுவீர்களா நாகமரே!''

''நீங்களே உதவ முன்வந்து விட்ட போது நான் மட்டும் மறுப்பதாவது?''

என்று கூறிக் கொண்டே எழுந்த நாகமநாயக்கன், மெல்ல அச்சதம்மாளின் கையைப் பற்றி அணைக்கிறான்...

அவள் — அச்சதம்மாள் மௌனமாக — எந்தத் துடிப்பும் எதிர் நடிப்பும் இன்றி நிற்க —

திருமலை நாயக்கர் இட்ட ஆணை நாகமன் நினைவுக்கு வருகிறது. இசைந்தால் கொன்று விடு...

ஏன் கொல்ல வேண்டும்? இசைந்தாய் விட்டது. ருசித்த பிறகு கொன்றால் என்ன?

நாகமநாயக்கன் இவ்வாறு அரச ஆணையைக் கால்களில் மிதித்து, தனது கரங்களை முதல் அபிஷேகத்துக்குக் கொண்டு சென்ற அடுத்த விநாடி...

ஓ... என்றலறுகிறான்...

அவனது மார்பில் ரத்தம் பீறிடுகிறது...

எப்போதும் தனது பாதுகாப்புக்காக



''ஐம்பது சதவிகிதம் தள்ளுபடி விலையில் புடவை வாங்காதீங்கன்னு சொன்னேனே கேட்டீங்களா?''

''ஏன், என்ன ஆச்சு?''

''கட்டிக்கிட்டால் உடம்பில் பாதி தெரியுது.''

—இளை அ. கதிர்வேல்

வைத்திருந்த அச்சதம்மாளின் குத்துவாள், நாகமனுடைய மார்பில் ஆழமாகவே பாய்ந்து விட்டது...

தரையில் விழுந்து மீனாய்த் துடிக்கிறான். தகாத செயலுக்குத் தன்னைத் தயார்ப் படுத்திக் கொண்ட தத்தாரி நாகம்!

''நாகமா! உன்னை நான் அறிவேன். நான் திருமலை பூபதிக்குத் தகுதியில்லாதவள் தான்! நான் அவரை வெறுக்கிறேன் என்பது உண்மைதான்! எனது இளமைக்கும் அழகுக்கும் அவரால் ஈடுகொடுக்க முடியவில்லை என்பது பரிபூரண உண்மைதான்! இந்தக் குறைபாடுகளை நோட்டம் பார்த்து மோப்பம் பிடிக்க வந்த நாயே! தூ! உனது அரச துரோகத்தால் நாயக்கர் வமிசம் தலைகுனிகிறது. நானும் நாயக்க மகள்தான். ஆனால் கற்புக்குத் துரோகம் நினையாதவள்; நினைத்துப் பார்க்க நாணுபவள்! எங்கள் தஞ்சை மண்ணை நாயக்கர் ஆண்டாலும் தங்கமனைய அந்தக் கலைப்பூமி ஒரு காலத்தில் சோழர்களுடைய சொப்பன புரியாய் இருந்தது! நான் நாயக்கர் ரத்தத்தில் பிறந்தாலும் தஞ்சை மண்ணில் பிறந்தவள்! கணவருக்குத் துரோகம் செய்கிறோம் என்பது பாதி உண்மை! ஆனால், இந்த மண்ணுக்குத் துரோகம் செய்யக் கூடாது என்பது முழு உண்மை! என்னைப் பிரார்த்தனை செய்து கொண்டு உனது ஆத்மா பிரியட்டும்!''

அவனது ஆத்மா பிரிந்து எத்தனையோ கணங்கள் உருண்டு மடிந்து போயின....

மதுரை மாமன்னர் திருமலை நாயக்கருக்கு இந்த உண்மை புரிந்ததோ என்னவோ?...

பொழுது விடிந்ததும் அச்சதம்மாள் மீது கொலைக் குற்றம் படிய இருந்தது.

அதன் காரணமாக —

அவளுக்கு மரண தண்டனையும் பழி பாவங்களுடன் காத்திருந்தது.

# குறைந்தபட்சம் ஆறு வித்தியாசங்கள்

## அந்த சில நாட்கள்



1. முரடா யிருந்தாலும் சுயநலமில்லாத அண்ணன், சங்கீதப் பிரியை தங்கை, சினிமாப் பிரியன் தம்பி, கலகலப்பாய் ஒட்டிக் கொள்ளும் பம்பாய்ப் பெண் என்று வலுவான பாத்திரப் படைப்புகளை நம்பி எடுத்த படம்.

2. கதை ரொம்ப சீரியஸாகப் போய்க் கொண்டிருக்கிறதே என்ற பயத்தில் அவசரத்துடன் சிலுக்கைத் திணித்து ஒரு பாட்டு.

3. அவ்வப்போது வந்து அருமையான கதைப் போக்கைக் கெடுக்கும் இரட்டை அர்த்த வசனங்கள்.

4. ஆரம்பத்தில் பற்றவைத்த பட்டாசு மாதிரி வெடிக்கிற – பின்னால் காதல் தோல்வியில் பதினைந்து நாட்கள் சிற்றப்பாக்க நண்பர்களோடு கழித்து வந்து 'பைத்தியம்' என்று முத்திரை குத்தப்படும்போதெல்லாம் தனக்குள் பொங்கி உடனே அடங்குகிற மோகன்.

5. இளையராஜா களைப்பா யிருக்கிற போது போட்ட ட்யூன்கள்.

6. நாடக உலகிலிருந்து இறக்குமதியானதால் இன்னும் போன ஜன்ம வாசனையைத் துறக்க முடியாமல் தவித்தாலும் கூட. –ஓ.கே.

## சூரப்புலி



1. நகையைத் திருடியவன், நடுங்கிய முரடர்கள், ஜெயிக்கிற பிரபு, கற்பழிப்புப் பண்ணையார், கொலைகாரன், அடிதடி இன்ஸ்பெக்டர் என்று வலிமையான பாத்திரங்களை நம்பி எடுத்த படம்.

2. கதை ரொம்ப லைட்டாகப் போய்க் கொண்டிருக்கிறதே என்று வேஷம் பொருந்தாத டெல்லி கணேஷ் குருக்கள் வீட்டில் பிரா; குடியேறுகிற சீரியஸ் கிளைக் கதை.

3. அவ்வப்போது வந்து ஆறுதல் அளிக்கும் ஒற்றை அர்த்த வசனங்கள்.
(கல்லாப் பெட்டி – ரவிக்கை மோப்பம் – உல்லா)

4. இவ்வளவு பெரிய உடம்பை வைத்துக்கொண்டு, குரலின் ஏற்ற இறக்கத்திலும், முக பாவத்திலும், நடன ஸ்டைலிலும் புலிக்குப் பிறந்ததை நிரூபித்துக்கொண்டு அநாயாசமாய்ச் சண்டை போட்டுத் துள்ளி விளையாடும் பிரபு.

5. மாவு மிஷின் கடையில் ஏரோப்ளேன் புகுந்த நேரத்தில் போடப்பட்ட கங்கை அமரனின் ட்யூன்கள்.
(கல்கத்தா காளி – பாடலுக்குக் காதில் பஞ்சுடன் தெளர்பெட்டும் போவது நலம்.)

6. இரண்டாந்தர மசாலாவாக இருப்பினும் பிரபுவின் 'கதை'யை நம்பி எடுத்திருப்பதால் – சொல்ல முடியாதுடா சாமி! ஓடினாலும் ஓடும்!



ஒரே ஒரு ஒற்றுமை

கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன்

வெங்கட்

அந்தக் காரை பெயர்ந்த மயிலாப்பூர் வீடு. அன்பான பியானோ தவிர சோற்றுக்கு வேறு வழி தெரியாத கதாநாயகன். பதவிசான அவன் இளம் மனைவி. படபடப்பான அப்பா. அம்மா. ஏராள கனவுகளுடன் தங்கை. அடடே. வித்தியாசமான துவக்கமாயிருக்கிறதே என்பதற்குள் வேதாளம் முருங்கை மரத்தில் ஒரே ஜம்ப்!

கணவனை. அவன் குடும்பத்தைக் கரையேற்ற வேண்டி அந்த இளம் மனைவி சினிமாவில் பாடப் போகிறாள் என்றதுமே தடம் கொஞ்சம் புரிந்து போகிறது. பொறாமையில் கணவன் புகைவான். மனைவி முழு நீளத்துக்கு முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்வாள். மாமியார். மாமனார் அவளைத் தூக்கி வைத்துக் கொண்டாடுவார்கள். ஏமாற்றாமல் நினைத்தபடியே கதை போகிறது. (ரசிகர்கள் மனைவியிடம் ஆட்டோகிராஃப் வாங்க மொய்க்கிறபோது பொருமுகிற கணவனை ஏற்கனவே ஹிந்தி 'அபிமான்' நமக்கு அறிமுகப்படுத்தி விட்டது நினைவில் தட்டாமல் இருக்கக் கூடாதோ?)

கணவனின் பொறாமை விவாகரத்து கோரிக் கோர்ட் வரை படியேற வைக்கிறது. தனியாய்க் கிளம்புகிறவன் ஊட்டிக்கு வந்து சேர. அங்கே இதய நோய்க் கதாநாயகி (இரண்டாவது க. நா.) வந்து அப்புறம்... அப்புறம் என்ன?

வயசுப் பொண்ணு தனியே நின்னு சிரிப்பதென்ன. ரசிப்பதென்ன. தவிப்பதென்ன— டூயட் (சொப்பனம்தான்) பாட்டு ப்ளஸ் இவர்கள் நெருக்கமாகிறபோது பழைய கதாநாயகி வந்து சேர. முக்கோணத்தில் யார் தியாகம் செய்யப் போகிறார்கள் என்பதை வெள்ளித் திரையில் காணச் சொல்கிற கதை. க்ளைமாக்ஸ் ஒரு சுறுசுறுப்பான Build up. ராதா தன்னை அறியாமலேயே எச்சில் இலையில் உட்கார்ந்து ஆசை ஆசையாய் உணவு உண்ணும் இடம். கணவன் படத்தை மறைக்க ரத்தம் வருகிற கையை முதுகுக்குப் பின்னால் மறைத்துக் கசக்கி, சிரித்து, அழித்துச் சிரித்து. அழித்துப் பேசுகிற காட்சி — மரபுக் கதையின் சுகமான இரண்டு வரிகள்.

கதையைத் திடீர் திடீரென்று சடன் ப்ரேக் போட்டுத் திருப்புவதில் கெட்டிக்காரராயிருக்கிறார் டைரக்டர் கே. ரங்கராஜ். (இந்தப் படம்தான் இவருக்குப் பிள்ளையார் சுழி என்பதை நம்பவே முடியவில்லை.) அது சரி. கோர்ட் ஆர்டரை அப்படித்தான் கல்யாண வாழ்த்துக்களோடு பதினொன்றாய் யார் கையில் வேண்டுமானாலும் கொடுப்பார்களா?

காமிரா பற்றி.... முதலில் தினேஷ் பாபுவை வைத்துக் கொஞ்சம் எடுத்து. ஒத்து வராமல் ஆள் மாற்றி ரவி பாபுவை வைத்து எடுத்ததாகச் சொல்கிறார்கள். சில இடங்களில் மெழுகின மாதிரி இருக்கிறது. சில இடங்களில் சோடியம் விளக்கு மாதிரி ஜ்வலிக்கிறது. பாம்பு மாதிரி ரயில் நெளிந்து வந்து நிற்கிற இடத்தில் தவறாமல் பாலு மகேந்திராவை ஞாபகத்துக்கு வரச் செய்கிறார்கள்.

முணு முணுக்க வைக்கிற 'அத்தனை' பாடல்களுக்கும் இசை சங்கர் கணேஷ். (தயாரிப்பாளர்களின் காதோடு ஒரு விஷயம். சங்கர் கணேஷிடம் நல்ல பாடல்களைக் கறக்க வேண்டுமென்றால் ஒன்றிரண்டு காட்சிகளில் அவர்களையும் திரையில் காட்டி விடுவது உத்தமம்.)

பிஞ்சில் பழுத்ததாய்க் காட்டிக் காட்டியே ஹாஜா ஷெரீப்பின் முகம் முதிர்ந்துவிட்டது. அப்பாவின் காதலுக்கு அவன் தூது போகிற விரசம்... குமட்டுகிறது.

வெளியே வருகிறபோது நெஞ்சில் இருக்கிற நிறைவுக்கு. மோகனா. ராதாவா. பூர்ணிமா ஜெயராமனா. டைரக்டரா யாரைக் காரணம் சொல்வது?

சங்கர் கணேஷையும் சேர்த்துச் சொல்லலாம்.

**-ஜெய மன்மதன்**



ராயல் பூடான் லக்கி வீக்லி
அளிக்கும்
மாபெரும் கார்னேசன்
பம்பர் பரிசு

புன்னகையுடன் பொன்மழை பொழிகிறது!

லாட்டரியில் இதுவரை தராத பிரமாண்டமான பம்பர் முதல் பரிசு!



முதல் பரிசு ரூ. 83 லட்சம்

டிக்கட் விலை ரூ.5
குலுக்கல் நாள்: 16-6-83
6 வரிசைகள்
மொத்த பரிசுகள் : 132636

மொத்த பரிசுத் தொகை
1 கோடியே 40 லட்சம்

2 வது பரிசு ரூ. 8 லட்சம்
3 வது பரிசு ரூ. 1 லட்சம்
வீதம் 6 பரிசுகள்
(வரிசைக்கு ஒன்று)

VIEMEL

ஆர்கனைசிங் ஏஜண்ட் :
அன்ராஜ் லாட்டரீஸ்
9, லேடி தேசிகா ரோடு
சென்னை-600004. போன் : 73725




(ஒ-ம்) டி. டிஸ்ஷரிங்
செக்ரடரி, மினிஸ்ட்ரி ஆப் பைனான்ஸ்
ராயல் கவர்மெண்ட் ஆப் பூடான்

எமது ஸ்டாக்கிஸ்டுகள் :
1) M/s. H. [illegible] & Co (சென்னை, [illegible]). 135, [illegible], சென்னை-600 005.
2) M/s. S. S. [illegible] & Co ([illegible]). 188, N. H. [illegible], கோயம்புத்தூர்-641 001.
3) M/s. [illegible] ([illegible]). 30, [illegible], திருச்சி-620 008.
4) M/s. [illegible] ([illegible]). 219 A, [illegible], மதுரை-625 001.
5) M/s. [illegible] ([illegible]). 182, [illegible], மதுரை-625 001.
6) M/s. [illegible] ([illegible]). 417-B, [illegible], சேலம்-636 001.




● தலையங்கம் கண்டேன். ராக்கெட் விஞ்ஞானத்திற்கு மத்திய அரசு செலவிடுவது குறித்துக் குறிப்பிட்டிருந்தீர்கள். நேரு காலத்தில் வி. கே. கிருஷ்ண மேனன் இராணுவ மந்திரியாக இருந்தபோது நட்பை மட்டும் பெரிதாக எண்ணி ராணுவச்செலவை மிகக் குறைவாகச் செய்தபோது நாம் பட்ட அடியையும், பின்விளைவாக நேருவையே இழந்ததையும் மறந்துவிட்டீர்களா?
திருவாரூர் ஜெ. ஜெயராமன்

● 'டில்லியிலிருந்து' பகுதியில் மாருதி கார் அப்ளிகேஷன் விலை ரூ. 10 என்று எழுதியிருப்பது தவறு. பாரம் விலை ரூ. ஒன்றுதான்.
கர்நூல் தங்கபாண்டியன்

**(தவறுக்கு வருந்துகிறோம். ஆனால் பிளாக்கில் ரூ 10க்கு பல இடங்களில் விற்கப்பட்டது உண்மை. -ஆர்)**

● 1–5–83 கல்கியில் நிலத்தடி நீர் சாம்பசிவ ஐயரைப் பற்றிய கட்டுரை படித்தேன். இந்தக் காது கேளாத சாம்பசிவ ஐயர் வாட்டர் டிவைனர் என்ற முறையில் சுமார் 24 ஆண்டுகளுக்கு முன் அழைக்கப்பட்டு என்னிடம் வந்தார். நான்கு கிணறுகள் பார்க்கப்பட்டன. அன்று இரவு என் வீட்டில் தங்கி (ராஜ உபசாரம்) மறுநாள் சென்றார். வழிச் செலவு தனி.

அவர் கூற்றை தேவ வாக்காகக் கருதி கூறுகெட்ட நான் இரண்டு கிணறுகளும் என் உறவினர் ஒன்றும் வெட்டினோம். அவர் கூறியதற்கு மேலாக 66 அடியாக வெட்டினேன். 120 அடி போர் போட்டேன். தண்ணீர் வரவில்லை. கண்ணீர்தான் வந்தது. அத்தனையும் பாறை.
சமுத்திரம் பி.பி. சம்பத்

**(100 சதம் வெற்றி கிட்டும் என்று சாம்பசிவம் கூறவில்லையே! தோல்விகளை அவரே ஒப்புக் கொள்கிறாரே! -ஆர்)**

● ''ஓ! உனக்கு வீடு சரியில்லையா? பிணக்கு நிறைந்த வாழ்க்கையா? அதுதான் இலக்கியத்தைத் தேடி அலைகிறாயோ?''

பாலகுமாரன் எழுதியதை எப்படி ஏற்பது? பிணக்கு நிறைந்த வாழ்க்கைதான் இலக்கியத்தைத் தேட வைக்குமா என்ன?

எப்படிப்பட்ட வாழ்க்கையானாலும் மனுஷனோட மனசுக்குள்ளே இலக்கிய தாகம் இருந்தா அது தானாகவே இலக்கியத்தைத் தேடவைக்கும். வாழ்க்கையை நேசிக்கிறவன் மனுஷாளோட மனங்களை நேசிக்கிறவன்–எந்தச் சூழ்நிலையிலும் சந்தோஷமா இருக்கிறவன். இவன்தான் இலக்கியத்தை நேசிக்கிறான். இணைபிரியாத நட்பும், ஆழ்ந்த காதலும்கூட இலக்கியத்தைத் தேட வைக்கும்.
கும்பகோணம் உஷா மணியன்

● வி. பி. சிந்தன் அவர்களின் பேட்டி சிறப்பாக இருந்தது. ஆனால் நாட்டுடைமை வங்கிகள், காப்பீட்டுக் கழகங்களில் பணி புரிவோரையும் தனியார் தொழிற்சாலையில் வேலைபுரிவோரையும் ஒப்பிட்டுச் சொன்ன பதில்தான் மிகவும் biased ஆக இருந்தது. சென்னையில் எங்கோ ஒரு மூலையில் ஏதோ ஒரு தொழிற்சாலையில் ஒரு ஸ்வீப்பர் ரூ. 860 பெற்றால், எல்லாத் தொழிற்சாலைகளிலும் எல்லாத் தொழிலாளியும் அப்படிப் பெறுவதில்லை என்ற உண்மையை ஏன் மறைத்தார்?
சென்னை-92 கே. ராஜகோபாலன்

● ஜூலை மாதம் உறுதியாக நகராட்சித் தேர்தல் வருகிற மாதிரி கார்ட்டூன் வரைந்திருப்பது வேடிக்கையாக இருக்கிறது. அப்படி வந்துவிட்டால் சென்னைக்கே வந்து உம் ஆபீஸ் முன்பே முடியை எடுக்கிறேன்.
வேலூர் செங்குட்டுவன்

● விமலாரமணியின் 'கலைகள்' படித்து ஆச்சரியப்பட்டேன். என் குழந்தைகள் படிக்கும் பள்ளியிலும் பெற்றோர் தின விழாவில் டூயட், காபரே தான், சினிமாப்பாட்டு வைத்து. மேலும் மிகக் கொடுமை என்னவென்றால், எல்.கே.ஜி., யு.கே.ஜி. குழந்தைகள் எட்டுப் பேரை இந்த ஷேக் டான்ஸுக்காக ப்ராவும் ஜட்டியும் போல் கறுப்பு ஜரிகை இட்டு, உடலை அசைத்து ஆட வைத்த கோரம்தான். நான் மனத்தில் எண்ணியதை ஆசிரியர் எழுத்தோவியமாக்கி யிருக்கிறார்.
திருச்சி-21 இந்திரா பத்மநாபன்



○ வடிவுடையம்மன்

# ஒளி திகழும் ஒற்றியூர்

ஆனந்தி

"திருவொற்றியூர் தியாகராஜன்" என்ற அடாணா ராக பதத்தின் பாவப் பொலிவினால் நாட்டிய மணிகளுக்கு அந்தத் தியாகராஜ ஸ்வாமியின் பரிச்சயம் உண்டு. பார்த்த விடமெல்லாம் தோற்றும் ஈசன்குடிகொண்டுள்ள திருவொற்றியூரை அப்பர் பெருமான் மனம் குளிர்ந்து பற்பல பாடல்களாய்ப் பரவித் துதித்திருக்கிறார். திருவொற்றியூருகே துறைமுகம் இருப்பதால்

"விடும் கலங்கள் நெடுங் கடலுள்
நின்று தோன்றும்
திரை மோதக் கரையேறிச் சங்கமூரும்
திருவொற்றியூர்"

என்ற நெய்தல் நில வருணனை இன்றும் பொருத்தமாக இருப்பதைக் காண்கிறோம். நெடுங்கடலிலிருந்து கப்பல்கள் வந்து கொண்டே இருக்கின்றன.

"பரவினார் பாவமெல்லாம் பறையப்
படர் பேரொளியோடு
ஒருவனும் நின்ற பெம்மான்
உறையுமிடம் ஒற்றியூரே!"

என்று சம்பந்தர் பெருமான் ஒளி வடிவமான இறைவனுடைய ஊர் ஒற்றியூர் ஒன்றுதான் என்று அழுத்தமாகச் சொல்கிறார்.

சுந்தரர் பெருமான் ஒற்றியூர் என்ற பெயருக்கு ஒரு காரணம் சொல்கிறார்:

"ஊதம் ஒற்றும் திரைவாய் ஒற்றியூரே"
என்று கடல் தன் அலைகளால் ஒற்றுகிற (தழுவுகின்ற) ஊர் ஒற்றியூர் என்கிறார்

நைமிசாரண்யத்தில் பாகவதம் பாரதம் முதலிய எல்லாக் கதைகளையும் சொல்லி முடித்த பிறகு சூதபௌராணிகர் கிளம்பிப் போய்விட்டார். வனத்தில் இருந்த முனிவர்களுக்கெல்லாம் பொழுதே போகவில்லை. சினிமாவோ டீ.வி.யோ இல்லாத காலம் அல்லவா? சூத முனிவர் திரும்பி வந்தார். எங்கிருந்து வந்தார் தெரியுமா? சிவயசிவ என்ற செந்தமிழ் மந்திரத்தை நவின்று கொண்டு, வெண்ணீறணிந்து ருத்ராக்ஷம் தரித்துத் தமிழ்நாட்டிலிருந்து வந்தார்.

நைமிசாரண்யத்து முனிவர்களுக்கெல்லாம் சந்தோஷம் தாங்கவில்லை. அவரைச் சூழ்ந்து கொண்டு "எங்கே போய் விட்டு வருகிறீர்கள்? 'நாராயண! நாராயண' என்று ஜபித்து வந்த நீர் 'சிவசிவ' என்று ஜபம் செய்யத் தொடங்கியது எப்போது? எங்களுக்குச் சொல்ல வேண்டும்!" என்று விண்ணப்பம் செய்த உடனே சூத முனிவர் ஆனந்த பரவசராகி, தாம் தென்னாட்டுத் தலங்களைத் தரிசித்து வந்தது பற்றியும், திருவொற்றியூர் தலத்தின் பெருமையையும் எடுத்துக் கூறத் தொடங்கினார்.

"என் குருவான வியாச முனிவர் ஒரு காலத்தில் எனக்குச் சொன்னதை நான் உங்களுக்குச் சொல்கிறேன்" என்று ஆரம்பித்தார்.

○ கோயில் முன்புறம்



''பதும கற்ப முடிவில் ஊழி வெள்ளம் பெருகி உலகமெல்லாம் அழிந்து பிரும்ம தேவனும் மாண்டு போனார். ஸ்ரீமந் நாராயணன் புதிய பிரும்மாவைப் படைக்க வேண்டுமே என்று கவலையோடு அந்த ஊழி வெள்ளத்தில் ஆதிசேடன் மீது யோக நித்திரையில் ஆழ்ந்தார். அவருடைய நாபியிலிருந்து ஒரு தாமரை தோன்றி மலர்ந்தது. அதில் பிரும்ம தேவர் வீற்றிருந்தார்.

உலகத்தைப் படைக்கும் தொழிலைச் செய்ய வேண்டுமே. பிரும்ம தேவரும் சிவபெருமானை நினைத்துத் தவம் செய்யத் தொடங்கினார். சிவபெருமான் அவருடைய உள்ளத்தில் காட்சி யளித்து உடனே மறைந்துவிடவே சதுர்முகனுக்கு வருத்தமாகப் போயிற்று. மறுபடியும் பரஞ்சுடரை நினைத்துத் தன் ஆவியை அடக்கிக் கடுமையான தவம் செய்யவே அந்த யோக வலிமையானது ஒரு பெரும் தீப்பிழம்பாக எரிந்தது. சிவபெருமான் கருணையினால் அந்தத் தீ நீராகக் குளிர்ந்து தங்கியது. அதிலிருந்து ஒரு சித்திரப் பலகை ஒன்று விசித்திரமாக வெளிப்பட்டது. சிவலிங்க வடிவமாகத் தோன்றிய அந்தப் பலகையிலிருந்து ஈசன் வெளிப்பட்டார். அப்போது பிரும்மதேவருடைய தவத் தீ குளிர்ந்து ஒரு அக்னிக் கோயிலாக வடிவமெடுத்தது. அதில் ஈசன் குடிபுகுந்தார். அவருக்கு இடப்புறத்தில் உமையம்மையும்கோயில்கொண்டுவிட்டார்.''

பலகை வடிவமாகச் சிவபெருமான் தோன்றியதால் படம் பக்க நாதரென்று பெயர் பெற்றார். அம்பிகையோ இரிபுரசுந்தரி, வடிவுடையம்மை என்ற திருநாமங்களுடன் வீற்றிருக்கிறார். எந்த அன்னையின் சக்தியானது யோகியர்க்குத் தவம் செய்யும் சக்தியையும் அதன் பயனையும் தருகிறதோ அந்த ஞான சக்தியாக இங்கே அருள் பாலிக்கிறாள் வடிவுடையம்மை.

''இந்த ஊரில் கிடக்கும் கற்கள் எல்லாம் சிவலிங்கம். மரங்களெல்லாம் கற்பக விருட்

○ உட்புறத் தோற்றம்



○ துவஜஸ்தம்பம்

சங்கள். நீரெல்லாம் கங்கை. உணவெல்லாம் அமுதம். இந்த ஊரில் நடந்தால் அது கைலாயத்தை வலம் செய்ததாகும். தூங்கினால் அது சிவபெருமானுடன் மனமொன்றி நிற்கும் நிஷ்டையாகும்.''

இவ்வாறு சூத பௌராணிகர் திருவொற்றியூரை வருணிக்கிறார். எல்லா ஊர்களிலுமே தல புராணங்கள் உண்டு. அந்தந்த தலத்தை பூலோக கைலாஸமென்றும், பூலோக வைகுண்டம் என்றும் புகழ்ந்துதான் எழுதுவார்கள். நாம் வசிக்கும் ஊர்தான் கைலாஸம், அதுதான் வைகுந்தம் என்றும் நினைத்து வாழ்வது எத்தனை உன்னதமான மனோபாவம்!

இவ்வளவு புகழ் வாய்ந்த தலத்துக்குச் சென்று வடிவுடையம்மனைத் தரிசித்து தியாகராஜ ஸ்வாமியையும் கண் குளிரக் காண வேணுமென்று ஒரு ஏகாதசி நன்னாளில் காலை ஏழு மணிக்குப் போய்ச் சேர்ந்தேன்.

கோவிலைச் சுத்தம் செய்துகொண்டிருந்தார்கள். கோபுர வாசலிலிருந்து ஒரே கூட்டம்! என்ன விசேஷமென்று பார்த்தால் குடங்களும் பக்கெட்டுமாகத் தண்ணீருக்காக அத்தனை பேரும் வந்திருந்தார்கள் என்று தெரிந்தது. நீரெல்லாம் கங்கை யென்று சூத முனிவர் கூறியிருக்கிறாரே.!

கோவிலை வலம் வரும்போது சூரிய பகவானை முதலில் வணங்கிவிட்டு சுந்தரர் சங்கிலியார் சந்நிதியை அடைந்து தரிசனம் செய்தேன்.

திருவொற்றியூரில் வாழ்வோருக்குச் சுந்தர மூர்த்தி சுவாமிகளிடம் சுவாதீனம் உண்டு. அவர் இந்த ஊர் மாப்பிள்ளை. சுந்தரர் இங்கே வந்தபோது சங்கிலி நாச்சியாரைக் கண்டு காதல் கொண்டு விட்டார். 'உன்னை என்றும் பிரியேன்' என்று வாக்குக் கொடுத்து விட்டு மணந்து கொண்டார். கொஞ்ச நாட்களான பிறகு திருவாரூரில் வஸந்தோத்சவம் நடக்கும் காலம் வந்தது. ஆரூரரை நினைத்துக் கொண்ட உடனே தாம் கொடுத்த வாக்கை மறந்து புறப்பட்டு

விட்டார். வாக்குத் தவறியதால் பார்வை போய்விட்டது. அதனால் மனம் தளராமல் கிளம்பிப் போய் விட்டார். பிறகு ஈசன் மனமிரங்கிக் கண்களைக் கொடுத்தார் என்பது சுவாரஸ்யமான கதை.

இடது பக்கத்தில் நந்தவனம். குளுமையாக இருக்கிறது. தியாகராஜ ஸ்வாமி ஸந்நிதி பூட்டியிருந்தது. ஆயினும் பல கணிக் கதவு வழியாகத் தரிசனம் செய்து கொண்டேன். சித்விலாஸ நாதனுடைய மண்டபக் கதவு அற்புதமான வேலைப்பாட்டோடு காணப்படுகிறது. எந்தப் புண்ணியவான் செய்ததோ.

மூலஸ்தானத்துக்கு எதிரே ஹோமாக்னி புகைந்து கொண்டிருக்கிறது. நித்திய ஹோமம் உண்டென்று அர்ச்சகர் ஒருவர் கூறினார். சுயம்புவான படம்பக்க நாதரைத் தரிசனம் செய்து கொண்டு வலம் வரும் போது இன்னொரு அழகிய கோயில் இருப்பதைக் காணலாம். அர்ச்சகர் ஏகாக்ர சிந்தையோடு சிவப்பும் மஞ்சளும் வெண்மையும் கலந்த நாகலிங்க மலர்களால் சிவலிங்கத்துக்கு அலங்காரம் செய்து கொண்டிருந்தார். தீபாராதனை செய்து பிரஸாதம் கொடுத்தபோது ''ஒற்றியூரப்பன்'' என்று திருநாமம் என்றார். இந்தச் சிறிய கோவிலும் முக மண்டபமும் சமீப காலத்திய திருப்பணி. மிகவும் கலைச் சிறப்புடன் திகழ்கிறது. தூணுக்குத் தூண் கைகூப்பிய நிலையில் அடியார்களின் சிலைகள். இராமலிங்க அடியாருக்குத் தனியே விளக்கேற்றிப் பூஜிப்பார்கள் போலிருக்கிறது. கர்ப்பக்கிரஹம் பளபளவென்று சலவைக் கல்லைப் போல இழைத்த கருங்கல்லால் கட்டப்பட்டிருக்கிறது.

இந்தக் கோயிலே ராமசாமி என்ற பக்தர் தனி ஒருவராகவே முன்னின்று மிக பக்தி சிரத்தையுடன் கட்டுவித்திருக்கிறார். எத்தனையோ சோதனைகளையும் மீறிப் பன்னிரண்டு வருட காலம் தினந்தோறும் ஒற்றியூரப்பனைத் தரிசனம் செய்த புண்ணியவான் இவர்.

வடிவுடையம்மன் கோவிலில் அபிஷேகம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அபிஷேக தீர்த்தம், குங்குமம், சந்தனம் பன்னீர் கலந்து மணக்க மணக்கப் பாய்கிறது. தலையில் தெளித்துக் கொண்டு தரிசனத்துக்காகக் காத்திருக்கும்போது ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி இந்த அம்மனைத் தரிசித்துப் பரவசமாகப் பாடியிருப்பது ஞாபகம் வந்தது.

''சுந்தரி நீ திவ்ய ரூபமுனு
ஜூட தனகு தொரிகே னம்மா.''

ஓ மகா திரிபுர சுந்தரியே! உன் திவ்ய ரூப தரிசனம் காண்பதற்கு எனக்குக் கொடுத்து வைத்திருந்தது. இது உன்னுடைய கடைக் கண் பார்வையின் பலனே தானோ? அல்லது முந்தைய பூஜா பலனோ? உன் ஞான வடிவைக் காண தேவர்கள் எல்லாரும் காத்துக் கொண்டிருக்கும் புனித ஆதிபுரி வாசியாகிய உன்னைக் காண்பதற்கு எனக்கு இன்று கொடுத்து வைத்திருந்தது'' என்று கல்யாணி ராகத்தில் எக்களிப்புடன் பாடியிருக்கிறார் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி.

இந்தப் பாடலைப் பாடிக் கொண்டிருக்கும் போதே நட்சத்திரங்கள் பதித்த நீலப் பட்டுத் திரை விலகி அலங்கார தீபத்தைத் தூக்கிப் பிடிக்கிறார் அர்ச்சகர். வடிவுடை நாயகி தூய வெண் பட்டாடை அணிந்து வெண்மை நிற நீல சம்பங்கி மலர்களால் கோத்த பதக்கம் போன்ற வட்ட வடிவமுள்ள மலர் ஆபரணம் தரித்துத் தூய்மையே வடிவமாய், ஆடம்பரமில்லாத திவ்ய ரூபத்துடன் காட்சி தருகிறார். ஞானம் இதுவே அல்லவா? தூய்மை ஞானம் அழகு அனைத்துமே ஆனந்தம்தான். இவை அனைத்தையும் வடிவுடையம்மனின் லாவண்ய தோற்றத்தில் கண்டு உள்ளம் குளிர்ந்து ஆனந்தத்தில் ஆழ்கிறோம்.

திருவொற்றியூரில் மகா ஞானியும் சித்தருமான பட்டினத்தார் ஜீவன் முக்தராக விளங்குகிறார். கடற் கரையோரமாக அவருடைய கோவிலும் இருக்கிறது.

புகைப்படங்கள்:
**சரஸ்வதி சத்தியமூர்த்தி**



**அட்டைப்படம்:**

குமாரி ராஷ்மியின் சொந்த ஊர் திருவனந்தபுரம். இளம் வயதில் கற்றது கதகளி; மோகினி ஆட்டம். ஆர்வம் காட்டுவது மாடர்ன் ஓவியம்.

வண்ணப்படம்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

# அமரர்கல்கி நினைவுச்சிறுகதைப்போட்டி'83





அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறு கதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**முதல் பரிசு** **ரூ. 1000**

**இரண்டாவது பரிசு** **ரூ. 500**

**மூன்றும் பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 250 விதம்)ரூ. 500**

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழ்ங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

* கதைகளை அனுப்பக் கடைசி தேதி ஜூன் 15.

* உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032**

## அத்தியாயம் 18

**கோ**துமை மூட்டை மொத்தமும் இறங்கிய பின்னும் லாரியைக் கிணற்றிலிருந்து மீட்பது சிரமமா யிருந்தது. குடத்துக்குள் டம்ளர் சிக்கின மாதிரி எப்படிக் கட்டி இழுத்தாலும் முட்டி நின்றது. மீறி வலுவுடன் க்ரேன் தூக்கும்போது பாரம் தாளாமல் முன் பக்கம் இழுபட்டது. க்ரேன் டிரைவர் திண்டாடினான். இறங்கி வெற்றிலை போட்டுக் கொண்டான். புகையிலை அதக்கிக் கொண்டான். மீண்டும் உட்கார்ந்து லிவர்களை இயக்கி உயரத் தூக்க முயற்சி செய்தான். அப்படியும் கிணற்றில் துருத்திக் கொண்டிருந்த ஒரு கல் லாரியை எழ ஒட்டாமல் செய்தது.

சிறுக்கி மவன், நாய்க்குப் பொறந்த பய, வாட்டமா சந்துல சொருகிட்டு ஓடியே பூட்டான் பாரேன். போட்டு வலிக்கிறதுக்கே மனசு வர்ல பாய். பளிச்சுன்னு தூக்கிடுவேன். அடி தாளாம லாரி ரெண்டாப் புட்டுக்கிச்சின்னு.

ராவுத்தர் பேசாமல் வேதனை கவிழ்ந்த முகத்தோடு நின்றிருந்தார்.

ஆங்காரமாய் க்ரேன் உறுமிப் பளுவில் தவிக்க லாரி அசைந்து சுவர் பக்கம் உராய்ந்து கிரீச்சிடும்போதெல்லாம் நெஞ்சில் ரத்தம் வடிந்தது.

சுவரில் முட்டி மோதிய காயம் மட்டுமல்லாது மீட்கப்படுகையிலும் லாரியின் பக்கச் சுவரும் முன் பக்கத் தகடும் கிழி பட்டன.

பிள்ளைப் பேறுக்குத் தவிக்கிற கர்ப்பிணி மாதிரி க்ரேன் முனகலும் தொப்புள் கொடி சிக்கிப்பனிக்குட நீர் குடித்த குழந்தையின் அலறலாய் லாரி ஓசையும் ராவுத்தரை வாட்டின.

''பாய் அவனை எங்கனாப் பாத்தா நெஞ்சிலியே ஏறி மிதி சொல்றேன். டிரைவரா அவன், பேமானி. காஞ்ச ஆறு தாண்டறப்ப சூடு தாங்காம கொளந்தையைப் போட்டு தின்னுனாமேஒருத்திஅந்தமாதிரி வண்டியைப் பொதிச்சிட்டுப்பூட்டான். படுபாவி.'' க்ரேன் டிரைவர் புலம்பிக் கொண்டிருந்தான். ''சொல்லு பாய், பளிச்சுன்னு இழுத்துருட்டுமா?'' மூணு மணி நேரம் போராட்டம் தாங்காமல் சொன்னான். ராவுத்தர் சரியென்று கையசைத்தார். விலகிக் கொண்டார்.

கூச்சல் போட்டுக் கொண்டிருந்த கூட்டம் பின்னால் நகர்ந்தது. அமைதியாயிற்று. க்ரேன் டிரைவர் லிவர்களைத் தொட்டுக் கும்பிட்டுக் கண் மூடிச் சில நிமிடம் உட்கார்ந்திருந்தான். 'நைனு கைவுட்றாதடா' என்றுக்ரேனிடம்பேசினான். மெல்ல மெல்ல என்ஜின் வேகம் கூட்டிக் லிவர்களைத் தழைத்துக்கட்டியிருந்த கம்பிக் கயிறுகளில் வலுவேற்றிப் பளிச்சென்று மாற்றி முழு உயரம் கொடுத்து வண்டியை இழுத்தான். நச்சென்று கல்லில் லாரி முன் பகுதி இடி வாங்கிற்று. நறநறவென்று கயிறுகள் உரச மேலே நகர்ந்தது. நீட்டிக்



கொண்டிருந்த பாறைக் கல்லும் லாரி முன் பகுதியும் அழுந்தித்தவித்தன. உயிருள்ள ஜந்துக்கள் போல் போராடின.

''கோவிந்தா, வெங்கட்ரமணா, ஏடுகொண் டலவாடா, சீனுவாசா, தாமோதரா'' க்ரேன் டிரைவர் கூவக் கூட்டம் எதிரொலித்தது. பளிச்சென்று கம்பிக் கயிறுகள் அறுந்தன. க்ரேன் சுழன்று பேயாட்டம் ஆடிற்று. லாரி தடால் என்ற பெரும் சப்தத்துடன் கிணற்றில் விழுந்தது. யந்திரமும் மனிதனும் ஒன்றுய்த் தோற்றுப் போனார்கள். க்ரேன் டிரைவர் வேதனையுடன் கீழிறங்கினான். இடது, வலது காலால் மாறி மாறித் தன் க்ரேன் வண்டியை எட்டி உதைத்தான்.

''கெட்ட பேரு வாங்கிக் குடுத்திட்டல்ல, போ உன்னையும் எங்கியாவது பாழும் கெணத் திலே தள்ளிர்றேன் போ.'' மறுபடி எட்டி உதைத்தான்.

ராவுத்தருக்குக் கண்கள் இருண்டன. முழங்கால் வலித்தது. மெல்லத் தரையில் குத்திட்டு உட்கார்ந்தார். தொப்பியை எடுத்துவிட்டுத் தலையைத் துடைத்துக்கொண் டார். ஊர் ஜனம் லாரியை விட்டு விட்டு ராவுத்தரைச் சூழ்ந்து கொண்டது. உண்மை யில் கிணற்றில் தள்ளப்பட்டது ராவுத்தர் தான் என்று ஜனத்துக்குப் புரிந்திருக்க வேண்டும். ஐயோ பாவம் என்று சூள் கொட் டியது.

கிணற்றுக்குச் சொந்தக்கார ரெட்டியார் மெல்லக் குனிந்து ராவுத்தரைத் தோளைத் தட்டிக்கொடுத்தார். ரூபாய் இரண்டாயிரம் நஷ்டஈடு என்று எழுதிக் கொடுத்த வெள்ளைத் தாளை மடித்து ராவுத்தரின் தோல் பை மீது வைத்தார்.

''நானும் லாரி ஓட்டி நொடிச்சவன்தான் ஐயா. எனக்கு உங்கள் காசு வேணும். குத்துப் பட்டவன் பையிலேருந்து துட்டு எடுக்கிறது பாவம். நான் வரேன்.'' சாலை யேறிக் கிரா மத்துக்குத் திரும்பினார்.

ராவுத்தர் பையிலிருந்து சால்வையை விரித் தார். தொப்பி அணிந்து கொண்டார். வானம் பார்த்துத் திசை தெரிந்தார். நெற்றி நிலம் அழுந்தத் தொழுதார். மௌன மாய் உள்ளுக்குள் அழுதார்.

பெரியபாளையம் போலீஸ் தீயணைப்புப் படைக்குச் சேதி சொல்லிற்று. ''அவன் பைப்புகளோடு இறங்கறவன். அவனுக்கு லாரி எடுக்கற வேலை தெரியுமா? எங்க பெரிய வரே முதல்லயே எங்களைக்கூப்பிடக்கூடாது?''

தீயணைப்புப் படையினர் வேலை தெரிந் தவர்கள். மேலும் கயிறு அறுந்து லாரி செங்குத்தாய் இறங்கியது சௌகரியமாய் இருந்தது.

முன் பக்க காபின் முற்றிலும் சிதிலமாகி க்ரேன் நுனியில் சில நிமிடங்கள் செத்த மீனாய் லாரி தொங்கிற்று. அலட்சியமாய்த் தரை தொட்டது.

உடைந்த வீலுக்குப் பதில் ஸ்டெட்னி மாட்டப்பட்டது. இன்னொரு லாரி துணை யோடு முன் பக்கம் உயர்த்தப்பட்டுப் ட்ன் பக்கச் சக்கரங்கள் மட்டும் சுழல 'இழுவை வில்' என்று எழுதப்பட்டுச்சென்னை நோக்கிப்



பயணப்பட்டது. இயணைப்புப் படையின ருக்கு க்ரேன் டிரைவருக்குக் கம்பி கட்டிய வனுக்கு கத்தியவனுக்கு காப்பி வாங்கி வந்த வனுக்கு என்று சகலருக்கும் ராவுத்தர் பணம் இறைத்தார். நெஞ்சக் கனமையோடு சென்னை வந்தார்.

தண்ணித் தொட்டித் தெரு முனையில் பூவரச மரத்துக்கருகில் லாரியை நிற்க வைத்தார். தண்ணித் தொட்டித் தெரு டிரைவர்கள், க்ளீனர்கள், உரிமையாளர்கள் புரோக்கர்கள், கூலியாட்கள், கூடை சுமப்ப வர்கள், தெருவில் போவோர், வருவோர் அத்தனை பேரும் வந்து பார்த்தார்கள். வெவ்வேறு தெருக்களிலிருந்து செய்தி கேட்டு ஓடிவந்து வேடிக்கை பார்த்தார்கள்.

★★★★★★★★★★★★★★★★★



பரபரப்பு, கவர்ச்சி, சினிமா இப்படி இல்லாம புதுமையா ஒரு பத்திரிகை—பெயர் 'சப்'.படிச்சவுடன் தூக்கம் வர ணும். டென்ஷன் குறைய விஷயங்கள் 'சப்'பென்று இருக்கணும்! நீங்கதான் ஆசிரியர். புராணம், அறுவை ஜோக்னு அவிழ்த்து விடுங்க!''

★★★★★★★★★★★★★★★★★

நடேச முதலி கிடங்கு அருகே அசையாது நின்றிருந்தார். காரை விட்டிறங்கியதும் ராவுத்தரிடமிருந்து தோல் பையை வாங்கிக் கொண்டார். பையைப் பிரித்துக் கிடங்கு சாவியைப் போட்டார்.

வீட்டுக்கு நடக்கத் தலைப்பட்ட ராவுத்த ரிடம் காந்திலால் மேத்தா கடை வாசலில் நின்றிருந்த மோட்டார் சைக்கிளைச் சுட்டிக் காட்டினன்.

அந்தப் புல்லட் மோட்டார் சைக்கிளில் வயர்லெஸ் பொருத்தப் பட்டிருந்தது. அவ் வப்போது தொண்டைச் செருமலோடு பேசிற்று. போலீஸ்.

ராவுத்தர் கேள்விக் குறியுடன் நடேச முதலியைப் பார்த்தார்.

நடேச முதலி ஆமென்று தலையசைத்தார்.

''நம்ம லாரியைப் பார்த்துட்டாங்களா?''

''பார்த்துட்டாங்க.''

''என்ன ஆச்சு?''

''எல்லாம் தெரிஞ்சு போச்சு.''

''எப்படி?''

''காட்டிக் குடுத்திருக்காங்க.''

''ஆரு யாரு?''

''தண்ணித் தொட்டித் தெரு ஆளுங்க தான். இன்னாருன்னு இப்பச் சொல்ல முடி யலே. நால் புடிச்ச மாதிரி நேரா நம லாரி யாண்ட வந்து பம்பரு பாத்தாரு. உங்களைக் கேட்டாரு. விவரம் சொன்னேன்.''

''கைது பண்ணிட்டாங்களா?''

''இல்லே.உங்களுக்காகக்காத்திருக்காங்க.''

''எப்படிப் பேசறுங்க?''

''ரொம்ப மொறப்பா. மூடி மொழுகிட லாமுன்னு பார்த்திங்களா? போலீஸ்னு இன்னுக் கிரையா? உங்க கூட்டத்துல எவண்டா யோக்கியன்? கொலை பண்ணிட்டுச் சம்பாரிக்கப் பாக்கிறீங்களா? அது நடக்காது அது இதுன்னு பேசறுங்க.''

''காந்திலால் மேத்தா கிட்ட என்ன?''

''அவரு அடக்கி உள்ள சாப்பிடக் கூட்டிப் போயிட்டாரு.''

''ரெண்டு லாரி மடங்கினு நான் தாங்க மாட்டேனே முதலி.''

''சோதனைக் காலம் ஐயா.''

''முடிவு காலம் முதலி.''

''ஆத்தோட போயிட்டா கரை தெம் படாதயா போய்டும்.''

''கண்மாய்ல சொருகிடுச்சே.''

''தெய்வம்னு ஒண்ணு இருக்குய்யா. நாம யாரையும் கெடுக்கலே. கெடுக்கத் தெரியாது நமக்கு.''

''கெடுக்கத் தெரியாத குறைதானு இத் தனை அடியும், வேதனையும். கோதுமை வண்டியைப் பார்த்திங்களா?''

''பாத்துட்டு வர்ற ஜனம் பேசறதைக் கேட்டேன். வரதனைப் பாத்திங்களா?''

''காணும்.''

''நன்றி கெட்டவன். நல்ல சாவு வராதுங்க அவனுக்கு.''

''வேணும் முதலி. நம்ம வாயால வேணும். எப்ப எந்தக் கூட்டைக் கலைச்சுட்டோமோ தெரியலே. இன்னிக்கு நம்ம குடி கலைஞ்சு போச்சு.''

''குடி கலையற அளவுக்கு நட்டமா? என்னுண்டை காசு உண்டு மொதலாளி. பதினெட்டு ரூபா சொச்சம் பாங்கிலஇருக்கு.''

''வட்டிக்கு வாங்கறதும் குடுக்கிறதும் பாவம். மதத் துரோகம். வட்டியில்லாத காசு வாங்க நாம ரத்த பந்தமா?''

''பிரிச்சுப் பேசறீங்க மொதலாளி.''

''வாயும் வயிறும் வேற முதலி. வண்டிய வித்துப்போடுவோம். மறுபடி மொதல்லேர்ந்து ஆரம்பிப்போம். தரகருகிட்டச் சொல்லுங்க.-கோதுமை வண்டி விலைக்குக் கிடைக்குதுன்னு.''

ராவுத்தர் முதலியைக் கிடங்கு இறக்கச் சொன்னர். விளக்குப் போட்டுவிட்டுக் கல்லாவில் உட்கார்ந்தார். காந்தி லால் கடைக்கு ஆள் அனுப்பித் தம் வருகையைத் தெரிவித்தார்.

# உங்கள் அழகுக்கு அழகூட்டும் குங்குமம்

புதிய சுமங்கலி டீலக்ஸ் குங்குமம்

இன்று தன் இயற்கை எழிலை எந்த மங்கையும் மேலும் பொலிவுறச் செய்யலாம். உங்கள் ஒப்பனைக்கு மேலும் மெருகூட்டு வது சுமங்கலி குங்குமம்.

கொஞ்சம்கூட வெளியே சிந்தாத சிறந்த பாக்கிங்கில் வரும் குங்குமம் அது ஒன்றே. ஆகவே அது உங்கள் கைப்பையிலோ அல்லது டிரஸ்ஸிங் டேபிள் மேலோ வைத்துக்கொள்ள உகந்தது. சுமங்கலி உங்களுக்குப் பிடித்தமான பலவித வண்ணங்களில் கவர்ச்சியான ஜாடி களிலும், பௌடர் உருவிலும் மற்றும் டீலக்ஸ் பர்ஸ் பாக்கிங்குகளிலும் கிடைக்கிறது.



டீலக்ஸ் குங்குமம்

**சுமங்கலி**

ஒரு கேசவர்த்தினி தயாரிப்பு

OBM 4952 TM

---

## அருணோதயம் 30ம் ஆண்டு
## அருமையான 31 நூல்கள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| 1. | அவளும் வந்தாள் — லக்ஷ்மி | 8 | 00 |
| 2. | ஒரு கல்யாணத்தின் கதை ரமணி சந்திரன் | 7 | 00 |
| 3. | நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் — ரமணி சந்திரன் | 6 | 00 |
| 4. | இலட்சியங்கள் தோற்பதில்லை —இனியவன் | 12 | 50 |
| 5. | ஜனனம் — வாஸந்தி | 7 | 50 |
| 6. | புதிய வானம் — வாஸந்தி | 6 | 00 |
| 7. | தொடுக்கப்படாத மலர்கள் —அனுராதா ரமணன் | 12 | 50 |
| 8. | நிழல் யுத்தங்கள் —பிரதிபா ராஜகோபாலன் | 10 | 00 |
| 9. | விரல் படாத வீணைகள் " | 4 | 50 |
| 10. | கண்ணம்மா-அமுதா கணேசன் | 11 | 00 |
| 11. | நிழல் மரம் — மாரி அறவாழி ஏ. நடராஜன் | 17 | 50 |
| 12. | வாழ்வெனும் ஊஞ்சல் நாதன் | 8 | 00 |
| 13. | ஒரு கவிதை அரங்கேறுகிறது பட்டுக்கோட்டை பிரபாகர் | 9 | 00 |
| 14. | ஒரு வானம் பல பறவைகள் | 9 | 00 |
| 15. | விக்கிரமன் காதலி-ர.சண்முகம் கவிஞர் மு. கிருஷ்ணசாமி | 10 | 00 |
| 16. | பூங்கவிதை நெஞ்சங்கள் சிலம்பொலி செல்லப்பன் | 6 | 00 |
| 17. | பாரதிதாசன் ஓர் உலகக் கவிஞர் குரும்பூர் குப்புசாமி | 8 | 00 |
| 18. | குட்டித் தீவை எட்டிப் பார்த்தேன் திருமருகல் சிங்காரவேலனர் | 25 | 00 |
| 19. | இந்து மத தத்துவங்கள் சி. முத்துப் பிள்ளை | 7 | 00 |
| 20. | இந்திய ஆலயங்கள் 1 & 2 நல்லி குப்புசாமி | 20 | 00 |
| 21. | வெற்றியின் வரலாறு | 9 | 00 |
| | **அருமையான சிறுவர் நூல்கள்** | | |
| 22. | கண்மணி கதை | 5 | 00 |
| 23. | சுதந்திரத்தின் கதை | 7 | 50 |
| 24. | கட்டுரைக் களஞ்சியம் | 5 | 00 |
| 25. | அறிவியல் புகட்டும் கதைகள் | 7 | 00 |
| 26. | இளைய ராணி | 7 | 50 |
| 27. | சிறந்தோர் வாழ்க்கையில் சின்னஞ் சிறு நிகழ்ச்சிகள் | 6 | 00 |
| 28. | சிந்தனை வளர்க்கும் சிறுவர் கதைகள் | 5 | 00 |
| 29. | விஞ்ஞானக் கதைகள் | 6 | 00 |
| 30. | குழந்தைகளுக்கான குட்டிக் கதைகள் | 8 | 00 |

தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ. 3-50 சேர்த்து அனுப்பவும்.

**அருணோதயம்**

போன் : 847553

3, கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை,
சென்னை—600 014

''என்னங்க ராவுத்தரே ஆள் அடிச்சிட்டுப் பேசாம உக்காந்திருக்கீங்க.''

முழு போக்கு வரத்து உடையில் முழு நீள சார்ஜ் ஷீட் புஸ்தகத்துடன் இன்ஸ்பெக்டர் நடராஜன் படியேறினார்.

''வாங்க ஆள் அடிச்சதா நீங்கதான் சொல்றீங்க. கேட்டுக்குறேன்.''

''அடடே கேட்க ஆள் இல்லேன்னு அப்படித்தான் அடிப்பேன்னே சொல்லுவீங்க போலிருக்கே.''

''பகையா பந்தமா தெருவுல போற ஆள் வண்டில அடிபட்டது கொலையில்லே இன்ஸ்பெக்டர்!''



மது, மாது, கைது

இருட்டு வழக்கில் சம்பு பிரசாத் என்பவரைக் கைது செய்ய பிடிவாரண்டுடன் சப் இன்ஸ்பெக்டர் ஆர். சி. ரிச்சாரியா என்பவர் வந்தார். அவர் வந்த நேரத்தில் வீட்டில் சம்பு பிரசாத் இல்லை.

சம்பு பிரசாத் வரும் வரையில் தங்குவதற்கு வீட்டில் இட வசதி செய்து தருமாறு ஆர்.சி. ரிச்சாரியா கேட்டார். வீட்டில் உள்ளவர்கள் இட வசதிசெய்து கொடுத்தார்கள். உண்ண உணவு வேண்டும் என்றார். உணவு அளித்தார்கள். உண்டார்.

அருந்துவதற்கு பிராந்தி வேண்டும் என்று கேட்டார். வாங்கிக் கொடுத்தார்கள். அருந்தினார்!

மது அருந்திய அவருக்கு மாது தேவைப்பட்டது. ஒரு மாது எனக்கு வேண்டும் என்றார். மது கொடுத்தவர்கள் மாதுக்கு ஏற்பாடு செய்யவில்லை! மாறாக உன்னூர்ப் போலீஸ் நிலையத்துக்குத் தகவல் கொடுத்தார்கள். பலன்? கைது செய்ய வந்தவர் கைது ஆனார்!

இது மத்திய பிரதேசம் சாகர் மாவட்டத்தைச் சேர்ந்த ரேகா என்ற ஊரில் நடந்தது.

—சுரால் பாகோ

''விபத்துத்தான். நிறுத்தி யார்ன்னு பாத்தா, பாத்து போலீஸுக்குச் சொன்னு விபத்துத்தான். ஓடி வந்துட்டா கொலேன்னு கூடச் சொல்லலாம்.''

''சொல்றதுக்கென்ன சொல்லுங்க. ஆடும் கோழியும் அறைபட்டாலே ஜனங்க வெட்டிப் போடுவாங்க. ஆளு அடிபட்டா என்ன நடக்குமோ.''

''அதனாலே...''

''ஓடி வந்துட்டான்.''

''ஆக ஒப்புக்கிறீங்க.''

''அது கடவுள் சித்தம்.''

''அட அவ்வளவு ஒழுக்கம் பேசறவரு அங்க வந்து ரிப்போர்ட் பண்ணலாமில்ல?''

''வேற வண்டி விபத்து ஆச்சுது. அதுக்குப் போயிட்டேன்!''

''ராவுத்தர் கம்பெனின்னு ராவுத்தர் தானு இங்க எல்லாமும். பத்து ஆளு இருக்காளுங்க கோடவுன்ல. ஆளு ஒருத்தனும் வாயைத் தொறக்க மாட்டேங்கறான். வண்டி ஓட்டுனது யாருன்னு தெரியாது. வண்டி யாருது தெரியாது. ராவுத்தர் எங்க தெரியாது. எப்ப வருவாரு தெரியாது.''

''யாரோ ரிப்போர்ட் பண்ணித்தானே வந்திருக்கீங்க. அப்புறம் கேள்வி எதுக்கு?''

''கேள்வி கேக்கறது எங்க வேலே. முதல் குத்தம் ஆள் அடிச்சது. இரண்டாவது நிறுத்தாம ஓடிவந்தது. மூன்றாவது மறைச்சது.''

''எதுவும் மறைக்கலே இன்ஸ்பெக்டர். படி ஏறினதும் ஒத்துக்கிட்டேன்.''

''பிடிச்சதும் வர உண்மைக்குப் பேரு ஒப்புதலா?''

''வாசல்ல எழுதியா ஒட்டுவாங்க?''

''இடக்குப் பேசறீங்க ராவுத்தர் போலீஸ்கிட்ட இடக்கு உதவாது.''

''என் நேரம் அப்படிப் பேசச் சொல்லுது. நான் வலில இருக்கேன் இன்ஸ்பெக்டர்.''

''அது பத்திக் கவலே இல்லே.''

''என் பதில் பத்தியும் கவலைப்பட வேணும்.''

''ஓ. திமிரான ஆள்னு சொன்னது சரிதான்.''

''யார் சொன்னது?''

''என் பேர் சொல்லிட்டா வெட்டிப் போட்டுருவீங்களோ? இல்ல லாரில இடிச்சட்டுப் பம்பரை ரிப்போர் பண்ணிடுவீங்களா?''!

ராவுத்தர் வேதனை தாங்காது முகம் கருங்கினார். உள்ளேகோபம் பொங்கிற்று. ''கருணையுள்ளவனே அல்லாவே. என்னை எனனிடமிருந்து காப்பாற்று. தீங்கு செய்பவரை உன் அருள் பார்வையால் மாற்று.''

''என்ன பேச்சையே காணோம்.''

''உங்களாண்ட பேச்சு எதுக்கு?''

''கோர்ட்ல பேசிக்கிடறேன்னு சொல்றீங்களா?''

''அங்கே நிதானமா சந்தேகமாக் கேப்பாங்க. தீர்மானமாப் பேச மாட்டாங்க.''

''இதுல சந்தேகம் வேறயா, விரலை உடைச்சுக் கையெழுத்து வாங்கிடமாட்டேன்.''

''அப்ப எதுவும் செய்துட வாணாம். எங்கக் குத்தம் இல்லேன்னுத்தானே விசாரணை.''

''அப்பக் கூப்டுங்க ஒட்றனவனே.''

''ராவுத்தர் நடேச முதலியைத் திரும்பிப் பார்த்தார். நடேச முதலி கையசைக்க இருட்டில் ஒதுங்கியிருந்த செல்லத்தம்பி வெளிச்சத்துக்கு வந்தான்.

''வாடா செல்லத்தம்பி, வண்டி ஓட்டினது யாரு?'' இன்ஸ்பெக்டர் நடராஜன் அவன் வருகையை எதிர்பார்த்தது போல் எக்களித்தார்.

சகலமும் சொல்லியிருக்கிறார்கள். யாரோ கூட இருந்து மொத்தமும் பிட்டு வைத்திருக்கிறார்கள். யார்? யார் அது? ராவுத்தர் நெற்றியை நீவிக் கொண்டார்.

''ஏண்டா முழிக்கிறே. உம் பேரு ஏழு இடவா?'' பேனாவைப் பிரித்தார்.

செல்லத்தம்பி தலையசைத்தான். நீட்டின இடத்தில் கையெழுத்துப் போட்டான்.

ராவுத்தரிடமும் கையெழுத்து வாங்கினார். வண்டியின் ரெஜிஸ்திரேஷன் புத்தகமும் செல்லத்தம்பியின் டிரைவிங் லைசென்ஸும் இன்ஸ்பெக்டரிடம் சரணாயிற்று.

''ம்ம். உங்க ஆளைக் காப்பாத்திட்டீங்க'' மறுபடி உரத்த குரலில் இன்ஸ்பெக்டர் சிரித்தார்.

நடேச முதலி அந்தச் சிரிப்பு சூட்சுமம் கண்டு பதறினார். ''அப்படிப் பேசாதீங்க ஐயா. மொதலாளி அந்த மாதிரி பாக்கறவரு இல்லே.''

''பின்ன என்னய்யா. இவன் என்ன பாவம் செஞ்சான் கம்பி எண்றதுக்கு.''

''அது ஒப்பந்தங்க. அதைக் கேக்க வேணும்.''

''ஒழிங்க எப்படியோ. செல்லத்தம்பி நட ஸ்டேஷனுக்கு.''

செல்லத்தம்பி சைக்கிள் ரிக்‌ஷாவில் ஏற்றப்பட்டான். தலை குனிந்து உட்கார்ந்திருந்தான். ரிக்‌ஷா மோட்டார் சைக்கிள் பின்னே நகர்ந்தது.

வண்டி மறையக் காத்திருந்தவள் போல் கௌசல்யா பம்பாய் கோடவுன் சந்திலிருந்து ஓடிவந்தாள்.

''ஐயோ! அடிக்க இட்டுக்கினு போறாங்களே. என் ராசாவே. ஒரு பாவமும் பண்ணாத பொறப்பாச்சே. கூறுகெட்டவன். எவனோ குடிகெடுத்துட்டானே. மகமாயி... கேட்பாரில்லயா? காட்டிக் கொடுத்தவன் வாழப் போறானா, நா பாக்கப் போறேனா... ஆத்தா உம் பேரு சொல்லி மண்ணாப் போடறேன். அவன் நாசமாப் போவ... நல்ல பாம்பு புடுங்க... அவன் பெண்டாட்டி தாலி அறுவ... அவ பூச்சுத்தாத போவ. அவன் போற வழில காறி முழிய...'' கை விரித்து மண் இறைத்து அவள்கதறக் காயத்ரியும் நாலு ஐயரும் ஆட்டோவில் வந்திறங்கினார்கள்.

காயத்ரி கௌசல்யாவை வியப்புடன் பார்த்தாள். இவள் யாரையோ திட்டுகிறாள். இதில் ஒரு கவிதை இருக்கிறது என்று நினைத்துக்கொண்டாள்.

கௌசல்யா பேச்சை ரசித்துக் கேட்டபடி கே. ஆர். வடிவேலு குடிக்க ஆரம்பித்தான்.

(தொடரும்)

# பிரச்னைகளைத் தீர்க்கச் சுலபமான வழிகள்:

1) ஒவ்வொரு பிரச்னைக்கும் தீர்வு கட்டாயம் உண்டு என்று நம்புங்கள்.

2) அமைதியாய் இருங்கள். பரபரப்பு சிந்தனையைக் கெடுக்கும். பிரச்னையை அமைதியான மனத்தோடு அணுகுங்கள்.

3) தீர்வைத் திணிக்க முயலாதீர்கள். மனத்தைக் குழப்பிக் கொள்ளாமல் இருங்கள். தீர்வு தானாய்த் தெரிய வரும்.

4) பிரச்னைகள் சம்பந்தமாய் எல்லா விஷயங்களையும் பாரபட்சமில்லாமல் சேகரியுங்கள்.

5) ஒரு காகிதத்தில் வரிசைப்படுத்துங்கள்.

6) கடவுள் கட்டாயம் காப்பாற்றுவார் என்று பிரார்த்தியுங்கள்.

7) கடவுளின் அருளை யாசியுங்கள்.

8) உள்ளுணர்வின் சக்தியை நம்புங்கள்.

9) கோயிலுக்குச் சென்று உங்கள் உள்மனத்தைப் பிரச்னையில் லயிக்க விட்டுக் கடவுளை எண்ணித் தீர்வை நோக்கி மனத்தைச் செலுத்துங்கள். இது ஒரு மகத்தான சக்தி என்பது அனுபவத்தால் தான் தெரியும்.

10) இந்த வழிகளைத் தீவிரமாய்க் கடைப்பிடித்தால் உள்மனத்திலிருந்து பதில் கிடைப்பது திண்ணம். அது சரியான தீர்வுதான். சந்தேகமே யில்லை.

—நார்மன் வின்செண்ட், பீல்-The Power of Positive Thinking என்ற புத்தகத்திலிருந்து.

—சந்தனத்தேவன்.



# சிரிப்புக் கொத்து



''என்னப்பா 171!... தூக்கக் கலக் கத்திலே சிரிச்சிக்கறியேன்னு கேட்டா நாணி, கோணிக்கிட்டு... சொல்லுப்பா''

''வந்து சார்... வந்து... வெக்கமா இருக்கு சார்... கனவுலே ஸ்க்கு விட் டுலே நான் ரெய்டு பண்ற மாதிரியும்... அவங்க அதைத்தடுக்கக்கவர்ச்சிடான்ஸ் ஆடற மாதிரியும்....''



''தூங்கிக்கிட்டு இருந்தவர் என்ன திடீர்னு நின்னுகிட்டு இப்படி.... ஓ... போர்வெல் பம்ப்அடிக்கிற ஞாபகமா!''



''காஸ் ஸிலிண்டர் சப்ளை பண்ற விட் டுலே எல்லாம் ரெண்டு டம்ளர் தண்ணி மாறுதல் வாங்கறேன்! நீங்களும்...''




'' 'வெய்யில், வெய்யில்' படத்தைப் பார்ப்போமே!''

''நடு ரோட்லே நல்லாத் தெரியுதே வெய்யில்! அதைக் காசு கொடுத்து தியேட்டர்லேதான் பாக்கணுமா?''



''என்ன துணிச்சல் இருந்தா இந்தக் காரியம் பண்ணுவே? உன்னை டிஸ்மிஸ் செய்யறேன்!... தாகத்துக்கு டிஸ்டில்டு வாட்டர் புட்டியை உடைச்சக் சாப் பிட்டியே!''



''புல்லாங்குழல் வித்வானுக்குக் கழுத்தை நீட்டிட்டு நான் படற அவஸ்தை! ஒரு புல்லாங்குழல் அடுப்பு அதலாம்! 'காஸ்' இல்லாம இங்கே ரெண்டு புல்லாங்குழல் அடுப்பாதது!''



டைரக்டர் ஆர். தியாகராஜன்



தமிழ்ப் பட உலகில் தொடர்ந்து வெற்றிப் படங்களைக் கொடுக்கும் சிலரில் 'மாப்பிள்ளை' ஆர். தியாகராஜன் ஒருவர். காலஞ்சென்ற சாண்டோ சின்னத் தேவருக்கு மாப்பிள்ளையானதால் இவரை அனைவரும் 'மாப்பிள்ளை' என்றே அழைக்கிறார்கள்.

சமீபத்தில் தியாகராஜனைச் சந்தித்தபோது மனம் விட்டுப் பேசினார்.

''நான் பிறந்தது பொள்ளாச்சியில். பி. எஸ்ஸி. படித்ததும் திருமணமாகி விட்டது. பிறகு பி. எல். படிக்க ஆரம்பித்தேன். அவ்வப்போது மாமனாரின் கம்பெனியில் (தேவர் பிலிம்ஸ்) நடக்கும் ஸ்டோரி டிஸ்கஷனில் கலந்து கொண்டேன். எனக்கு சினிமா லைனில் ஈடுபாடு இருப்பதைப் புரிந்து கொண்ட மாமனார் ''மாப்பிள்ளை நீங்க சினிமா ஃபீல்டில் இறங்கணும்னு வெறும் ஸ்டோரி டிஸ்கஷன் மட்டும் போதாது. எடிட்டிங், கேமிரா, புரொடக்ஷன் வேலையெல்லாம் தெரிஞ்சுக்கணும்'' என்று அறிவுரை தந்தார். அவர் கூறியபடி பலரிடம் பயிற்சி பெற்றேன். சட்டப் படிப்பை நிறுத்திவிட்டுப் படங்களை இயக்க ஆரம்பித்தேன்.

நான் இயக்கிய முதல் படம் இது. தமிழ், இந்தி இரண்டு மொழிகளிலும் இப்படத்தை இயக்கினேன். ஆரம்பத்தில் இப்படத்தை கறுப்பு வெளுப்பில்தான் எடுக்க விரும்பினேன். ''நீங்க செட்டுக்கு வந்தால் கெடுபிடியாக இருப்பீர்கள். என்னால் சுதந்திரமாகச் செயல்பட முடியாது'' என்று மாமனாரிடம் கூறினேன்.

''மாப்பிள்ளை பயப்படாதீங்க. நஷ்டமானாலும் பரவாயில்லை. கலரிலேயே படத்தை எடுங்க. நானும் செட் பக்கம் வரமாட்டேன்'' என்று பெரியவர் கூறினார். இந்தப் படத்தில் நடிக்க பதினொன்று நாகப் பாம்புகளை மோடி மஸ்தான் கொண்டு வந்தார். சில பாம்புகள் அழகாகப் படமெடுக்கும். சில நன்கு படிகளில் ஏறும். சில ஆவேசமாகக் கொத்தும். படத்தில் பார்த்தால் எல்லாமே ஒரே பாம்பு செய்வது போல் தோன்றும். ஜெயசித்ரா அப்போது பிஸி ஆர்ட்டிஸ்ட். என்றாலும் அவர் பயப்படாமல் பாம்புடன்

ஜெயசித்ரா
வெள்ளிக்கிழமை விரதம்





ராமன் லட்சுமணன் - தெலுங்குப் படப்பிடிப்பு (ஊட்டி)

நடித்தது பாராட்டுக்குரிய விஷயம். படப் பிடிப்பு நடக்கும்போதே இரண்டு பாம்புகள் சூடு தாங்காமல் இறந்துவிட்டன. படப்பிடிப்பு முடிந்ததும் ராமேஸ்வரம் போய் நாக சாந்தி செய்து திரும்பினோம்.

எனது முதல் படம் தமிழில் ஹிட். இந்தியில் ஃப்ளாப். தமிழ் ரசிகர்களிடம் பக்தி அதிகம். இந்தியில் பாம்பைப் பார்த்து ரசிகர்கள் பயந்ததால் படம் தோல்வி. அதனால் இந்திப் பட விநியோகஸ்தர்களுக்கு நஷ்டமான பணத்தைப் பெரியவர் திருப்பிக் கொடுத்துவிட்டார்!

**தே**வர் பிலிம்ஸ் படங்கள் என்றாலே அதில் மிருகங்கள் சிறப்பாக நடிக்கும் என்பது ரசிகர்களின் கணிப்பு. எப்படி மிருகங்களை நன்கு நடிக்க வைக்கிறீர்கள்?

பெரும்பாலும் மிருகங்களை வெய்யில் நேரத்தில் நடிக்க வைக்கக் கூடாது. காலை எட்டு முதல் பதினொன்று வரை, மாலை மூன்று முதல் ஐந்தரை வரை நடிக்க வைப்போம். புலி ஒரு மூடி டைப். அது காம உணர்ச்சியுடனிருக்கும்போது நடிக்கவைப்பது கஷ்டம். இரவு நேரத்தில் படப்பிடிப்பு நடந்தால் மிருகங்கள் சிறப்பாக நடிக்கவாய்ப்புண்டு.

ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. 'ஹாத்தி மேரா சாத்தி' படத்தில் ஹீரோ ராஜேஷ் கன்னா மிருகங்களுக்கு டின்னர் கொடுப்பார். அப்போது நாலு சிங்கம், நாலு புலி, நாலு ஆடு, நாலு யானை, சிறுத்தைகள்வட்டமாக அமர்ந்திருக்கும். இவற்றை வட்ட வடிவமாக அமைதியாக அமர வைக்க மாஸ்டர் பத்து நாள் பயிற்சி கொடுத்தார். திடீரென்று மாஸ்டரின் குச்சி ஒரு புலியின் மீது தவறுதலாகப் பட்டு விட்டது. அது திடீரெனப் பாய்ந்து தட்டி மீது அமர்ந்தபோது ஒரே குழப்பம். சலசலப்பு. பெரியவர், "ராஜேஷ் டோண்ட் மூவ்" என்று குரல் கொடுத்தார். அப்போது இரவு பத்து மணி. ஒரு பேராபத்து நடக்க வேண்டியது. கடவுள் அருளால் தப்பினார் ராஜேஷ்.

நீங்கள் தற்போது இயக்கி வரும் சஷ்டி விரதம் பற்றி?

மாமனார் உயிருடன் இருந்தபோது இரண்டு வருடத்துக்கு ஒரு முறையாவது பக்திப் படம் எடுக்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தார். முருக பக்தர்களுக்கு சஷ்டி விரதம் ஒரு முக்கிய விழா. முருகனை நம்பி நம்மை ஒப்படைத்து ஆறு நாட்கள் விரதமிருக்கும் இந்த நிகழ்ச்சியைப் படமாக எடுக்கிறோம். இது பற்றி வாரியார் சுவாமிகள், மற்றும் திருச்செந்தூரில் சில பெரியவர்களிடம் தெளிவான தெய்வீக விவரங்களைக் கேட்டுக் கதையில் இணைத்துள்ளோம். இந்தப் படத்தில் எனது மைத்துனர் தண்டாயுதபாணியும் ஒரு சிறு வேடத்தில் நடிக்கிறார்!

படப் பிடிப்பின் முதல் நாளன்று என்ன மாதிரிக் காட்சியை எடுப்பீர்கள்?

ஹீரோ ஹீரோயினைப் பார்த்து வெற்றி வெற்றி என்று சொல்வது போலக் காட்சியை எடுப்பது தேவர் பிலிம்ஸின் வழக்கம். 'தாய் சொல்லைத் தட்டாதே' படத்திலிருந்து இதுவே சென்டிமென்டான பழக்கமும் கூட. படத்தில் இக்காட்சி எப்படியும் இடம் பெற்றுவிடும்.

பேட்டி: மன்னை சௌரிராஜன்

# மயிலையில் மாதவம்

அந்தப் பெண் குழந்தைக்கு ஆறு வயசானபோது, தன் தாயாருடன் காஞ்சிப் பெரியவர் ஜகத்குரு சந்திர சேகரேந்திர சரஸ்வதி அவர்களின் திருமுன்னர் சென்று நிற்கும் பேறு கிடைக்கிறது. பெரியவர் அந்தத் தாயிடம் கட்டளையிடுகிறார்: ''எங்கே, உனக்கு உபதேசம் பண்ணினேனே, அதை உன் குழந்தைக்குச் சொல்லிக்கொடு.''

அந்த ஞானப் பிழம்பின் முன்னால் மூல மந்திர உபதேசம் பெற்ற குழந்தைதான் இப்போது தவத்திரு அன்னை சாந்தா அம்மாவாக விளங்கி அருள்பாலிக்கிற 'அம்மா.'

ஆறு வயதில் தொடங்கிய ராஜ ராஜேஸ்வரி வழிபாடு எக்காரணம்கொண்டும் தடைப்படக் கூடாது என்பது பரமாச்சார்யாளின் அருளாணை. பதினொன்கு வயதான குழந்தை சாந்தாவுக்குத் திருமணம் செய்யலாமா என்கிற எண்ணம் பெற்றவர்களுக்கு வந்தபோது, காஞ்சிப் பெரியவர் 'ஆகா... செய்யலாம்' என்று ஆசியருளினார்கள். ஆனால் பூஜைக்கு இடையூறில்லாமல் இருக்கட்டும் என்பதுதான் அவர் விதித்த நிபந்தனை.

இந்தத் தவயோக நிலைக்கு ஏற்றவராய் ஒரு மணமகனும் கிடைத்தார். பூஜை, வழிபாடுகளில் அழுத்தமான பற்றும் நம்பிக்கையும் கொண்டவரான திரு வேங்கட ராமனைத் திருமணம் செய்து வைத்தார்கள்.

இரண்டு குழந்தைகள். இரண்டாவது குழந்தை கார்த்தி பிறந்ததும், 'அம்மா' பூரணமான துறவு நிலை எய்திக் காவி உடையில் அருள் பாலிக்கத் தொடங்கி விட்டார். மூலமந்திர உபதேசம் பெற்ற 29ம் ஜயந்தி விழா அண்மையில் சென்னையில் நடைபெற்றது.

மயிலாப்பூர் பீமசேனு தோட்டத் தெருவில் 40ம் எண் இல்லத்தின் மாடியில் அமைந்துள்ள ஸ்ரீ சாந்தாமணிக் கிருஹத்தில் 'அம்மா'வின் பூஜா கிருகம் இருக்கிறது. மூகாம்பிகை, ராஜ ராஜேஸ்வரி விநாயகர் திருவுருவங்கள், காஞ்சிப் பெரியவரின் அருளழகு சொட்டும் பெரிய படம். இந்தச் சூழலில் அம்மா அருள் பாலிக்கிற அழகை எழுத்தில் வடித்துக் காட்ட முடியாது. அனுபவம்தான் உள்ளபடி உணர்த்த முடியும்.

''வழிபாட்டுக்கு இந்தப் பூஜா கிருஹத்துக்குத்தான் வரவேண்டும் என்பதில்லை. அவரவர், ஆன்மா சுத்தியுடன் வீட்டிலேயே மனம் நெகிழ்ந்து வழிபடலாம். பரிபூரணமாக நம்மை அம்பிகையிடம் சமர்ப்பணம் செய்துவிடுகிற சரணாகதி ஒன்றுதான் மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு உற்ற வழி.'' என்றெல்லாம் அம்மா சொல்லிக் கொண்டே போகிறபோது, மனசின் இருட்டெல்லாம் மாயப் புகையாய்க் கரைந்து போய் அற்புதமான தெய்வீக ஒளியில் திளைக்க நம்மாலும் முடிகிறது.

ஒரு நாள் யாரோ ஒருவர் இங்கே கொடுக்கச் சொல்லி அனுப்பினார்கள் என்று சொல்லி அன்னை மூகாம்பிகையின் திருவுருவச் சிலை ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்துப் போனாராம். இவர்கள் அப்படிச் சிலை ஒன்றையும் கேட்கவில்லை. அனுப்பியவர்கள் யார்? அம்மாவின் இஷ்ட தெய்வம் ஸ்ரீராஜ ராஜேஸ்வரிதான். ஆனாலும் தானே தேடி வந்துள்ள மூகாம்பிகைக்குத் திருக்கோவில் ஒன்று விரைவில் திருவான்மியூரில் அமையவிருக்கிறது. 'அம்மா' தனக்கு ஒரு சிறு குடிலுடன், பக்தர்கள் தங்கி வழிபட வசதியாகச் சுற்றிலும் தங்குமிடங்கள் கட்டி ஆலயத்தை உருவாக்கத் திட்டமிட்டு வருகிறார்கள். இருபத்தைந்து மனைகள் கொண்ட நிலப் பரப்பில் அமையவிருக்கும் இந்தத் திருப்பணிக்காக 'ஸ்ரீ சாந்த மூகாம்பிகா டிரஸ்ட்' அமைக்கப்பட்டு விட்டது.

பரவசமூட்டக்கூடிய... நம்பலாமா.. இதுவும் சாத்தியம்தானா என்கிற பல நிகழ்ச்சிகள் பலரும் சொல்கிறார்கள். இந்தப் பேட்டிக்குப் போயிருந்தபோது அம்மாவின் வலப்புறக் கண்ணில் ஏதோ வேதனை. முதல் நாள் ஏதோ தூங்கில் பட்டையோ ஏதோ குத்தி விட்டது. வேதனையோடு பூஜையை எல்லாம் முடித்துவிட்டு ஓய்வாக இருக்கிறபோது மாலையில் தந்திச் செய்தி வருகிறது. ''அம்மா... காலையில் இங்கே கண் ஆபரேஷன் செய்து கொண்டேன். சுகம்'' என்று ஒரு பக்தர் வெளியூரிலிருந்து தகவல் தருகிறார்.

அந்தப் பக்தரின் கண் வேதனையை அம்மா தான் ஏற்றுக் கொண்டாரா? பகுத்தறிவுக்கு இதெல்லாம் ஏற்புடையதா? ஆமாம் என்கிறார்கள் அன்பர்கள். இது போல் நிறைய உண்டாம்.

அப்பழுக்கற்ற ஆடம்பரங்களில்லாத, ஆன்மிகத் தேடலுக்கு அம்மா நிச்சயம் விடை தருகிறார்கள் என்பதை அங்கு கூடுகிற பக்தர் கூட்டம் தெளிவாய்க் காட்டுகிறது.

-சுப்ரபாலன்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# வேர்க்குரு
# தாக்கும்
# போது...

## ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் அரிப்பு மற்றும் எரிச்சலை நிறுத்து-கிறது <u>உடனடியாக.</u>

ாது வேர்க்குரு தாக்கினாலும்
் முறியடிக்க உபயோகியுங்கள்
ான்ஸ் பிரிக்லி ஹீட பவுடர்.
ான்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில்
மே நிரூபணம் பெற்ற மருந்துக்
வ அடங்கியுள்ளது. அது
ிகளில் தீவிரமாக செயல்
றது !

- க்டீரியா கிருமிகள் பெருகுவ தைத் தடுக்கிறது.
- ியர்வையை உறிஞ்சுகிறது.
- டல் அரிப்பு மற்றும் ரிச்சலுக்கு நிவாரணமளிக்கிறது டனடியாக !






சந்தன
மணத்திலும்
கிடைக்கிறது

Johnson & Johnson

